அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு.

ஸ்ரீ:

# நைஷ்கர்ம்ய ஸித்தி ஸாரம்

(ஸ்ரீ ஸுரேசுவராசார்யார் ஸம்ஸ்கிருத பாஷையில் இயற்றிய நைஷ்கர்ம்ய ஸித்தியிலுள்ள விஷயங்களின் தமிழ்ச் சுருக்கம்)

எழுதியவர் :

*K. V.* சுப்பரத்னம், *B. A., B. L.,*

(பொதுகாரியதரிசி, அகிலபாரத சங்கரஸேவா ஸமிதி)

வாணீ விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்.

1970

*Rs. 3/-*

# முன்னுரை

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள் சிருங்ககிரியில் ஸ்ரீ சாரதா தேவியை பிரதிஷ்டை செய்து சிலவருஷகாலம் சிஷ்யர்களுக்கு பாஷ்யப்ரவசனம் செய்துகொண்டு அங்கு வஸிக்கும்போது தம்முடைய ஸூத்ரபாஷ்யத்திற்கு தமது சிஷ்யரான ஸுரேச்வரர் வார்த்திகம் இயற்றவேண்டுமென்ற தமது எண்ணத்தை தமது சிஷ்யர்களிடம் பிரஸ்தாபித்தார். இதை பத்மபாதர் முதலான சிஷ்யர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஸுரேசுவரர் தீவ்ர மீமாம்ஸகராக இருந்தபடியால் இப்பொழுது வாதத்தில் ஜயிக்கப்பட்டு அத்வைதியாயிருந்தபோதிலும் பூர்வவாஸனையால் மீமாம்ஸா ஸித்தாந்தப்படி பாஷ்யத்திற்கு விபரீதமாக உரை எழுதிவிடுவார் என்று காரணம் கூறினார்கள். இதைக் கேட்டு ஆசார்யாள் அத்வைத ஸித்தாந்தத்தை விளக்கித்தனி நூலொன்று எழுதும்படி ஸுரேசுவரரைப் பணித்தார்கள். இவ்வாறு குருவின் ஆக்ஞையைப்பெற்று ஸுரேச்வரர் எழுதிய தனி நூல் தான் "நைஷ்கர்ம்யஸித்தி" என்பது.

वेदान्तोदरसंगूढं संसारोत्सारि वस्तुगम् ।
ज्ञानं व्याकृतमप्यन्यैर्वक्ष्ये गुर्वनुशिक्षया ॥

न ख्यातिलाभपूजार्थं ग्रन्थोऽस्माभिरुदीर्यते ।
स्वबोधपरिशुद्ध्यर्थं ब्रह्मविन्निकषाश्मसु ॥

— நைஷ்கர்ம்யஸித்தி 1-3, 6

ஸ்ரீ ஞானோத்தமமிச்ரர் எழுதிய 'சந்த்ரிகா' வியாக்யானத்தில்

'गुर्वनुशिक्षया–'त्वया ग्रन्थः कर्तव्यः' इति गुरोरनुशासनेन तदाज्ञा-परिपालनाय अहं तद्वक्ष्ये'

என்று உரை எழுதியிருக்கிறார் அதாவது 'புகழ், லாபம், ஸத்காரம் கிடைப்பதற்காக இந்த கிரந்தத்தை நான் இயற்றவில்லை. 'நீ கிரந்தம் எழுதவேண்டும்' என்று குரு ஆக்ஞை செய்தபடியால் அதை நிறைவேற்றுவதற்காகவும், ப்ரஹ்மவித்துக்களாகிற உரைகல்லில் என்னுடைய ஞானத்தை சோதிப்பதற்காகவும்தான் இந்த நூலை எழுதுகிறேன்' என்று நைஷ்கர்ம்யஸித்தியின் ஆரம்பத்தில் ஸ்ரீ சுரேசுவரர் கூறுகிறார். ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யாளின் சரணாரவிந்தங்களை ஸேவித்து அவருடைய அநுக்ரஹத்தையும் உபதேசங்களையும் பெற்று அந்த பலத்தாலேயே இந்த நூலை தாம் இயற்றியதாக முடிவில் கூறுகிறார். முதலில் அவர் தீவ்ர மீமாம்ஸகராக இருந்தது வாஸ்தவம். ஆனால் ஸ்ரீ சங்கராசார்யாளின் சிஷ்யராகி அவருடைய உபதேசத்தைப்பெற்று பாஷ்யங்களையும் வாசித்த

பின் உபநிஷத்துக்களின் உண்மைக் கருத்துக்களைத் தெரிந்து தான் எண்ணியது தவறு என்பதை உணர்ந்து பின்னால் தீவ்ர அத்வைததத்வ நிஷ்டராக ஆகிவிட்டார் என்பது அவருடைய நூல்களைப் பார்த்தவருக்கு நன்கு விளங்கும்.

இதை முழுவதும் பார்த்து ஆசார்யாள் மிகுந்த ஸந்தோஷமடைந்து தைத்திரீய உபநிஷத் பாஷ்யத்திற்கும் பிருஹதாரண்யக உபநிஷத் பாஷ்யத்திற்கும் வார்த்திகம் எழுதும்படி ஸுரேச்வரருக்கு ஆக்ஞை செய்தார்கள். சுலோக ரூபமான இவ்விருநூல்களும் மிகவும் விரிவானவை. இது தவிர தக்ஷிணாமூர்த்தி அஷ்டக வியாக்யானமான மானஸோல்லாஸமும் பஞ்சீகரண வார்த்திகமும் இவரால் இயற்றப்பட்டவை. ப்ரஹ்ம ஸித்தியில் கூறப்பட்ட பல கருத்துக்களைத் தமது நூல்களில் கண்டித்திருப்பதால் அந்நூல் இவர் எழுதியதல்ல. மண்டனர் என்ற பெயருள்ள வேறொரு பண்டிதரால் இயற்றப்பட்டது என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிவு. குமரிலபட்டரிடம் வார்த்திகம் எழுதும்படி ஸ்ரீ சங்கராசார்யார் சொன்னார். மரணாந்த ப்ராயச்சித்தம் அனுஷ்டித்தபடியால் அது நிறைவேறவில்லை. சிஷ்யர்களின் மூலமாகவே விக்னம் ஏற்பட்டு விட்டதால் ஸுரேசுவரரும் எழுதவில்லை. ஆகவே, ஸூத்ர பாஷ்யத்துக்கு ஒருவரும் வார்த்திகம் எழுதமுடியாமல் போய் விட்டது. பத்மபாதர் எழுதிய ஸூத்ரபாஷ்ய வியாக்யானமும் லோபத்தை அடைந்து நான்கு ஸூத்ரங்களின் உரைதான் இப்பொழுது மிஞ்சி இருக்கிறது. "பாலக்ரீடை" என்ற யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதியின் உரைநூலும் விச்வரூபர் எழுதியதாகக் கூறுகிறார்கள்.

ஸுரேசுவராசார்யாளின் அத்வைதப்பற்றுதலில் ஸந்தேஹம் ஏற்பட்டு அதைப் பரீக்ஷிப்பதற்காக ஏற்பட்ட நூலானபடியால் நைஷ்கர்ம்யஸித்தியில் முக்யமாக மீமாம்ஸா ஸித்தாந்தத்தையும் பிறமதங்களையும் பற்பல யுக்திகளைக் கொண்டு கண்டித்து ஔபநிஷதமான அத்வைத ஸித்தாந்தத்தை நன்கு நிலை நிறுத்தியுள்ளார்கள். இந்நூலுக்கு அமைந்த பெயரிலிருந்தே இதை நாம் நன்கு தெரிந்து கொள்ளலாம். இந்நூலின் ஆரம்பத்தில்

अशेषवेदान्तसारसंग्रहप्रकरणमिदमारभ्यते

என்று கூறியுள்ளபோதிலும் முடிவில் "நைஷ்கர்ம்யஸித்தி" என்ற பெயரைக் கூறியுள்ளார்.

संबन्धोक्तिरियं साध्वी प्रतिश्लोकमुदाहृता ।
नैष्कर्म्यसिद्धेर्ज्ञात्वेमां व्याख्यातासौ भवेद्ध्रुवम् ॥

பகவத்கீதையில்

असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।
नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥ (१८-४९)

என்ற சுலோகத்தில் 'நைஷ்கர்ம்யஸித்தி' என்ற பதத்தை ஸ்ரீ கிருஷ்ணன் உபயோகப்படுத்தியுள்ளார். இந்த சுலோகத்தின் பாஷ்யத்தில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் இந்த பதத்தின் அர்த்தத்தை நன்கு விவரித்துள்ளார். நிஷ்க்ரியமான அதாவது கர்ம ஸம்பந்தம் கொஞ்சமுமில்லாத ப்ரஹ்மமே ஆத்மா என்ற ஞானத்தில் நிஷ்டை, நிலையாக இருத்தல் நிஷ்க்ரியமான ஆத்ம ஸ்வரூபமாக இருப்பது என்ற ஞானநிஷ்டை, முக்தநிலை தான் நைஷ்கர்ம்ய ஸித்தி என்ற பதத்தின் பொருள். அடுத்த சுலோகத்தில் 'निष्ठा ज्ञानस्य या परा' என்று கீதையிலேயே இது காட்டப்பட்டுள்ளது. இந்த நிலையானது ஸந்யாஸத்தால், ஞான பூர்வகமான ஸர்வ கர்ம பரித்யாகத்தால் ஏற்படுகிறது.

இங்கு ஓர் ஸந்தேஹம் எழக்கூடும் கீதையில் 3வது அத்யாயத்தில்,

न कर्मणामनारम्भात् नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च संन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥

என்ற சுலோகத்தில் கர்மாவைச் செய்யாமலிருப்பதால், கர்மாவை விட்டு விடுவதால் நைஷ்கர்ம்ய ஸித்தியை அடைய முடியாது என்று கூறியுள்ளார். 18வது அத்யாயத்தில் ஸந்யாஸத்தால் நைஷ்கர்ம்ய ஸித்தியை அடைவதாகக் கூறுகிறார். இது ஒன்றுக்கொன்று விரோதம் போல் தோன்றுகிறது ஆழ்ந்து கவனித்துப் பார்த்தால் விரோதமில்லை. சித்த சுத்திக்கு உபாயமான கர்மாக்களை அனுஷ்டிக்காவிட்டால் ஞானம் ஏற்படாது, நிஷ்க்ரியாத்ம ஞானமில்லாமல் கர்மாக்களைச் செய்யாமல் விடுவதால் மட்டும் நைஷ்கர்ம்ய நிலைமையை அடையமுடியாது. ஆனால் நிஷ்க்ரியமான ப்ரஹ்மமே ஆத்மா என்ற ஞான மூலமாக கர்ம பரித்யாகம் செய்தவன் நைஷ்கர்ம்ய ஸித்தியை அடைகிறான்.

இந்த நூலை வாசித்து இதில் விளக்கியுள்ள கருத்துக்களை உணர்வதன் மூலம் நிஷ்க்ரிய ப்ரஹ்மாத்மைக்ய ஞானம் ஏற்பட்டு நைஷ்கர்ம்யஸித்தியை, ஞான நிஷ்டையை, முக்தி நிலையை அடைவதால் இந்த நூலுக்கும் நைஷ்கர்ம்யஸித்தி என்ற பெயர் ஏற்பட்டது. ஆலஷு இஷ்டஸித்தி, ப்ரஹ்ம ஸித்தி, அத்வைத ஸித்தி என்ற பெயர்களில் போல் இங்கும்

ஸித்தி பதத்திற்கு நிச்சயம் என்று அர்த்தம் சொல்லலாம். நிஷ்க்ரியமான ப்ரஹ்மமே ஆத்மா என்ற நிச்சயம் இந்நூலால் ஏற்படுவதாலிதற்கும் நைஷ்கர்ம்யஸித்தி என்ற பெயர் ஏற்பட்டதாகச் சொல்லலாம். ஆகவே க்ரியாதி ஸம்பந்தமற்றது ப்ரஹ்மம், அதுவே தான் ஆத்மா. ஆத்மா கர்த்தாவல்ல. இந்த ஞானத்தால் தான் முக்தி என்னும் புருஷார்த்தம் கிடைக்கும். ஞானத்திற்கு உபயோகமான சித்த சுத்தியை கர்மா உண்டு பண்ணியபோதிலும் கர்மாவால் முக்தி ஏற்படுவதில்லை. இது முதலான பல விஷயங்களை நன்கு விசாரித்து யுக்திகளைக்கொண்டு உறுதிப்படுத்தி

நைஷ்கர்ம்யஸித்தி நான்கு அத்யாயங்கள் கொண்டது. மொத்தம் 423 சுலோகங்கள் உள்ளன சுலோகத்தின் கருத்துக்களைக் காட்டியும் அவதாரிகையாகவும் வசன நடையும் உள்ளது. இதற்கு ஸம்பந்தோக்தி என்று பெயர். இதைக்கொண்டுதான் சுலோகங்களின் கருத்துக்களைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்று முடிவில் கூறுகிறார்.

संबन्धोक्तिरियं साध्वी प्रतिश्लोकमुदाहृता ।
नैष्कर्म्यसिद्धेर्ज्ञात्वेमां व्याख्याताऽसौ भवेद्ध्रुवम् ॥

முதல் அத்யாயம் முழுவதும் மீமாம்ஸகர்களின் கொள்கைகளைக் காட்டி பற்பல யுக்திகளால் நன்றாக நிராகரணம் செய்கிறார். முதலில் ப்ரதிஜ்ஞை செய்யும்பொழுதே ப்ரஹ்மாத்மைக்யத்தை அறியாததால்தான் ஸம்ஸாரத்துன்பம் இந்த அறியாமையின் (அவித்யையின்) நாசம்தான் முக்தி உபநிஷத்துக்களிலுள்ள மஹா வாக்யங்களால் ஏற்படும் ஞானம்தான் அவித்யையைப்போக்கும் கர்மா போக்காது என்று கூறுகிறார் இதில் அவர்கள் கூறும் ஆக்ஷேபங்களுக்கெல்லாம் ஸமாதானம் கூறுவதுடன் புகையால் மதிமழுங்கியவர்கள் தன் புத்தியால் கல்பித்துக்கூறும் வாதங்கள் யாகசாலையிலும் ச்ரோத்ரியகிருஹத்திலும் தான் சோபிக்குமே தவிற அறிவாளிகள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்று பரிஹாஸம் செய்கிறார். ஜைமினியின் தாத்பர்யத்தையும் எடுத்துக்காட்டுகிறார். முக்திக்கு நேரிடையாக கர்மா உபயோகப்படாவிட்டாலும் நித்யநைமித்திக கர்மாக்கள் சித்தசுத்தியைக் கொடுப்பதால் ஞானம் ஏற்பட உபயோகப் படுகின்றன. ஞானகர்ம ஸமுச்சயவாதத்தையும் நிராகரணம் செய்கிறார். கடைசியாக அக்ஞானத்தை அழிக்கும் ஆத்ம ஞானம் உபநிஷத்திலுள்ள மஹா வாக்யத்தினுல்தான் ஏற்

படுகிறது என்பதை நிருபணம் செய்கிருர் ஆக ஞான:
தான் தாத்பர்யம் கர்மாவில் அல்ல என்று முதல் அத்யாயத்தில்
ஸமன்வயத்தைக்காண்பித்தார்.

இரண்டாவது அத்தியாயத்தில் இந்த ஸமன்வயத்திற்கு பிரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களின் விரோதத்தைப் பரிஹாரம் செய்து மஹா வாக்யத்திலிருந்து ஆத்மஞானம் ஏற்படும் பிரகாரத்தையும் காட்டுவதற்காக த்வம் பதார்த்த சோதனம் செய்து ஸ்தூல தேஹம் முதல் அஹங்காரம்வரை எல்லாம் அநாத்மா என்றும் இவைகள் அக்ஞானத்தால் தோன்றுவதாகவும் இவைகளுடன் ஆத்மாவுக்கு ஸம்பந்த மில்லையென்றும் கூடஸ்தமாயும் விகாரமற்றதும் ஸாக்ஷியாயு முள்ள ஆத்மா தனிப்பட்டது என்றும் இம்மாதிரியான ஆத்ம ஞானத்தால் அக்ஞானம் விலகி அத்யாஸம் விலகுமென்பதை நிருபணம் செய்கிருர்.

மூன்ருவது அத்யாயத்தில் ஆத்மாவுக்கும் அநாத்மா வுக்கும் பரஸ்பரம் அத்யாஸம் ஏற்படுவதற்குக் காரணமான அக்ஞானத்தை விசாரித்து தத்பதலக்ஷ்யார்த்தத்தையும் த்வம்பத லக்ஷ்யார்த்தத்தையும் காட்டி அகண்ட சைதன்ய ஸ்வருபத்தை மஹாவாக்யம் போதிக்கும் பிரகாரத்தை நிருபணம் செய்கிருர். தத்பதார்த்தத்திலுள்ள பரோக்ஷத் தன்மையையும் த்வம் பதார்த்தத்திலுள்ள ஸம்ஸாரித்தன்மை யையும் விலக்கி மிஞ்சியுள்ள சைதன்ய ஸ்வருபம் இரண்டிலும் ஒன்று என்பதைக்காட்டுகிருர். இந்த அத்வைத தத்வத்தை மஹாவாக்யம் தவிற வேறு பிரத்யக்ஷம் முதலான பிரமாணங் களால் அறியமுடியாது. மஹாவாக்யம் பரமார்த்த தத்வத்தை போதிக்கிறதே தவிற ப்ரஸங்க்யானம் என்னும் பாவனையை விதிக்கிறதில்லை என்று ப்ரஸங்க்யான வாதத்தைக் கண்டிக்கிருர்.

நான்காவது அத்யாயத்தில் முன் சொன்ன விஷயங்களை யெல்லாம் சுருக்கமாகக்கூறி ஆத்மாநாத்ம விவேகப்ர க்ரியையை நிருபணம் செய்கிருர். இந்த விவேகமுள்ள வனுக்குத் தான் ஞானம் ஏற்பட்டு முக்தி கிடைக்கும். கடைசியில் பகவத்பாத கௌடபாதஸூக்திகளை பிரமாண மாகக் காட்டி முக்தநிலையையும் கூறி இந்த கிரந்தத்திற்கு அதிகாரிகளையும் கூறி குருவந்தனத்துடன் முடிக்கிருர். இந்த நூலுக்கு ஸ்ரீ ஞானோத்தமமிச்ரர் "சந்திரிகை" என்னும் வியாக்யானம் இயற்றியுள்ளார்.

இந்நூலில் அடங்கியுள்ள கருத்துக்களை ஸம்ஸ்கிருத பாஷையில் நன்கு பரிசயமுள்ளவர்கள் தான் அறிந்துகொள்ள முடியும். மற்றவர்கள் அறிந்து கொள்ளமுடியாது. இக்குறையை நீக்கி யாவரும் தெரிந்துகொள்வதற்காக மிகுந்த பிரயாசை எடுத்துக்கொண்டு தமிழாக்கித்தந்த அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி காரியதர்சி ஈரோடு அட்வகேட் ஸ்ரீ K. V. சுப்பரத்னம் அய்யர் அவர்களுக்கு ஆஸ்திகமக்கள் கடமைப்பட்டுள்ளார்கள்.

ஸுரேச்வரர் பூர்வாச்ரமத்தில் விச்வரூபர் என்றும் மண்டனமிச்ரர் என்றும் பிரஸித்தியுடன் விளங்கினர். இவருடைய பிதா பண்டித ஹிமமிச்ரர் காஷ்மீர் ஸம்ஸ்தானத்தில் ராஜகுருவாக இருந்தார். பீஹார் ராஜ்யத்தில் (மிதிலா) ஸஹர்ஸா ஜில்லாவில் உள்ள மஹிஷீ என்ற கிராமம்தான் (இதுவே முற்காலத்தில் மாஹிஷ்மதீ என்ற பெயருடன் பிரஸித்திபெற்றிருந்தது) மண்டனமிச்ரருடைய ஜன்மபூமி என்று சரித்திர ஆராய்ச்சி நிபுணர்கள் பல யுக்திகளைக் கொண்டு தீர்மானித்துள்ளார்கள்.

பூர்வாசிரமத்தில் கர்மாக்களை யனுஷ்டித்து சித்தசுத்தி பெற்று ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாளிடம் உபதேசம் பெற்று ஸந்யாஸியாகி வேதாந்த விசாரம் செய்து ஆத்ம ஞானம் அடைந்து ஜீவன் முக்த நிலையிலுள்ள ஸ்ரீ ஸுரேசுவராசாரியாரை சதுராம்னாய பீடங்களில் முக்யமான சிருங்கேரி ஸ்ரீ தக்ஷிணாம்னாய வ்யாக்யான பீடத்தில் ஸ்ரீ ஜகத்குருவாக நியமித்ததின் மூலம் அவரிடம் ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யார் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தார் என்பது நன்கு தெரிய வருகிறது. ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ தக்ஷிணாம்னாய சாரதாபீடத்தில் முதலாவது ஜகத்குருவாக விளங்கிய ஸ்ரீ ஸுரேசுவராசார்யாளின் ஸமாதியில் இந்த ஜகத்குருபரம்பரையில் வந்துள்ள அபிநவவித்யாதீர்த்த மஹாஸ்வாமிகளின் திவ்ய அனுக்ரகத்தால் நடை[illegible]ரபிஷேக சமயத்தில் இந்நூல் வெளிவருவது [illegible]த அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியிடும் [illegible]ல யாவரும் வாசித்து பிறவிப் பயனைப் பெற ஸ்ரீ ஸத்குருவின் அருள் கிட்டுமாறு வே[illegible]கிறேன்.

*K. S. வெங்கடராமசாஸ்திரி*
உதவி ஆசிரியர் "ஸ்ரீ சங்கர க்ருபா"
ஸ்ரீரங்கம்.

# நைஷ்கர்ம்ய ஸித்தி – ஸாரம்

உலகில் உள்ள எல்லோரும் துக்கத்தை அடையாமல் இருப்பதற்கு பிரயத்னம் செய்கிறார்கள் என்பது தெரிந்ததே. துக்கத்துக்கு தேஹாபிமானம் காரணமாகிறது. தேஹம் ஏற்பட்டதற்குப் பூர்வ ஜன்மாவின் கர்மா காரணம். செய்ய வேண்டியதைச் செய்வதும், செய்யக்கூடாததைச் செய்வதும்தான் இதற்கு மூலகாரணம். இதற்குக் காரணம் ராகமும் துவேஷமும். இதற்கு நல்லது கெட்டது என்ற கற்பனையும், அதற்கு "உலகம் சாசுவதமானது" என்ற துவைத பாவனையும் இதற்கு உண்மையில் இரண்டற்ற பரமாத்மாவை அறியாமை என்ற அக்ஞான பாவனையும் காரணமாகின்றன. ஆகையால் எல்லாவற்றிற்கும் மூல காரணமாவது ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறியாமல் இருத்தலேயாம். இந்த அக்ஞானத்தைப் போக்குவதற்கு சுத்த பிரும்மத்தை அறிவதே வழியாகிறது. இந்த அறிவு வேதாந்த வாக்கியங்களால்தான் ஏற்படும். அதனால் எல்லா வேதாந்தத்தின் ஸாரத்தை எடுத்துக்காட்டப் புகுவோம். இந்த அக்ஞானத்தை நிவர்த்திப்பதற்கு ஈசுவரனின் கடாக்ஷமும் குருவின் அனுகிரஹமும் ஆத்ம ஞானமும்தான் சக்தி உள்ளது. ஆத்மாவை உணர்ந்த ஜீவன்முக்தனே இந்த ஞானத்தை நமக்கு ஊட்ட சக்தி உள்ளவர். இனி ஞானத்தால் முக்தி பெறுவதில் பல அபிப்பிராயங்கள் இருப்பதைக் கீழே சொல்லி அதற்குப் பதிலையும் விளக்கத்தையும் பார்ப்போம்.

**கேள்வி:** நாம் எடுத்திரு[illegible]ாவுக்கு (தேஹத்துக்கு) முன் செய்த புண்ய[illegible]ண்டும் ா காரணம் என்று எல்லோரும் ஒப்புக்கொள்கிறோம். பிராரப்த கர்மாவால் உண்டான இந்த ஜன்மாவைத் தவிர்க்கமுடியாது அனுபவத்தால்தான் அது தீரும் என்றும் சொல்கிறோம். [illegible]கவே இந்த ஜன்மாவில் காம்ய கர்மாவைச் செய்யாமலும் நித்த

கர்மாவை நீக்கியும் இருந்தாலே பாபம் செய்யாததாக் ஆகிறதே. முன் செய்த பாபம் அனுபவத்தால் தீர்ந்து விடுகிறதே. ஆகையால் ஏதற்காக நித்திய கர்மாக்களை செய்துதான் ஆகவேணும் என்கிறீர்கள் ?

பதில்: அவைகளைச் செய்யாமல்போனால் பாபம் ஸம்பவிக்கும் ஆகவே, ஆத்மஞானம் என்பது உண்டு என்று ஒப்புக்கொண்டாலும் மோக்ஷம் என்பது அந்த ஞானம் இல்லாமல் கர்மாவினாலேயே ஏற்படலாமே. மேலும் சுருதி, ஸ்மிருதி இரண்டிலும் எங்கு பார்த்தாலும் "கர்மாவைச் செய்" என்றே காணப்படுகிறது. "ஞானத்தை அடை" என்று சொல்லப்படவில்லையே. ஆகையால் வேதத்தில் குறிப்பாய் சொல்லப்படாததை நாம் செய்வது நமக்கு பிரயோஜனமற்றதல்லவா. தவிற ஜைமினிபோன்ற மகான்கள் "வேதம் கர்மாவைச் செய்யச் சொல்லித்தான் போதிக்கிறது" என்று சொல்லி இருக்கிறார்கள்.

'कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेत् शतं समाः'

நூறு ஆண்டுகள் கர்மாவைச்செய்துகொண்டே ஜீவிக்க வேண்டும் என்றல்லவா வேதம் சொல்கிறது. வாக்யங்களுக்கு வினைச்சொல் (க்ரியாபதம்) இல்லாவிட்டால் வாக்ய மாகாது. அப்படிச் செய்கையைக் குறித்தால் அது கர்மாவைச் செய்யும் ரீதியைத்தான் சொல்லும். ஆகவே கர்மா இல்லாமல் ஸித்த வஸ்துவான பிரும்மத்தை வேதம் சொல்லாது. (அறிவதினாலேயே மோக்ஷம் ஏற்படாது) எனவே கர்மாவி[illegible]லேயே இது கிடைக்கும். (மீமாம்ஸகர்களில் சிலரின் அபி[illegible]றுகிறது:- பிரும்மம் என்ன என்பதை அறிந்த பின்பும் ஒருவனை மீதமுள்ள ஆயுள்காலம் வரை கர்மாவை செய்தால்தான் மோக்ஷம் உண்டு என்கிறார்கள்)

மேலே சொன்னது மீமாம்ஸகர்களின் மதம், தவறு என்று கீழே சொல்லுவோம்.

கர்மாவுக்குக் காரணம் நம்முடைய அக்ஞானம்தான். இந்த அக்ஞானத்தை நிவர்த்திப்பதே மோக்ஷமாகையால் அந்த அக்ஞான நிவர்த்தி கர்மாவினுல் ஏற்படமுடியாது. இருட்டில் உண்டான பழுதையை பாம்பு என்ற பிரமத்தை அந்த இருட்டே நீக்காது. ஏனெனில் ஒன்றுக்கொன்று பகை கிடையாது. அதுபோல் அக்ஞானத்தால் உண்டான கர்மா, தன் காரணமான அக்ஞானத்தை அழிக்காது. இருட்டை நீக்க ஒளி போல் ஞானமே அக்ஞானத்தை நீக்க வல்லது.

மேலும் கர்மாவே மோக்ஷத்தைக் கொடுக்கும் என்று சொல்வதானுல் அது ஒரு கர்மாவாலேயா அல்லது பல கர்மாக்களின் சேர்க்கையாலேயா என்று கேள்வி. ஒரு கர்மாவினுல் என்று பதில் கிடைத்தால், அப்போது மற்ற கர்மாக்கள் வீணுகுமே. பல கர்மாக்களினுல் என்று சொன்னுல் அவைகள் முடிவில் ஒரு கர்மாவிலல்லவோ சேரும். ஆனுல் கர்மகாண்டத்தைச் சொல்லும்போது வெவ்வேறு கர்மாக்களுக்கு வெவ்வேறு பலன் உள்ளது என்றல்லவோ சொல்லுகிறது. அதிலும் உலகில் வெவ்வேறு ஆசிரமம் உள்ளவர்களுக்கு (பிரும்மசாரி, கிருஹஸ்தன், ஸந்நியாசி) வெவ்வேறு கர்மாக்களை வேதம் குறிப்பிடுகிறது. ஆகையால் ஒரே மனிதன் எல்லா ஆசிரமங்களின் கர்மாக்களையும் செய்யமுடியாது. ஒவ்வொரு ஆசிரமிக்கும் அவனவனுடைய கர்மாவினுல் மோக்ஷம் உண்டாகும். எனவே மோக்ஷம் அநேகவிதமானதாகும். ஆனுல் மோக்ஷம் என்பது எல்லோருக்கும் ஒன்றுபோலானதே. ஆகையால் இந்த வாதமும் சரியில்லை.

நித்யமாக செய்யப்படவேண்டும் என்ற கர்மாவைச் செய்வதற்குப் பலன் ஏதும் சொல்லப்படாததால் இதுவே மோக்ஷத்துக்கு ஹேதுவாகும் என்று சொல்லலாமே எனில், அதுவும் சரியல்ல. வேதத்தில் ஒவ்வொரு கர்மாவுக்கும் ஒரு பலனைக் குறிப்பிட்டிருக்கிறது. எங்கும் ஒரு கர்மாவுக்கு

மோக்ஷம் பலன் என்று குறிப்பிடப்படவில்லை. நித்ய கர்மா செய்வது பாபம் ஏற்படாமல் இருப்பதற்காகவேதான். காம்ய கர்மாக்கள் சிற்சில குறிப்பிட்ட ஸ்வர்கம் போன்ற லாபங்களை அடைவதற்காகச் செய்யப்படுகின்றன. ஆக கர்மாவினாலேயே மோக்ஷம் ஏற்படும் என்ற கொள்கை நிராகரிக்கப்பட்டது.

இனி ஆசைதான் கர்மாவுக்குக் காரணம், அக்ஞானமே ஆசைக்குக் காரணம் என்று நிரூபிக்கப்படும். வேதத்துக்கு சம்பந்தமில்லாமல் நாமே நமக்கு நன்மை என்று பல காரியங்களைச் செய்கிறோம். தீமை என்று பல காரியங்களை தவிர்க்கிறோம். எது நன்மை, எது தீமை என்பதை நம்முடைய அனுபவத்தைக்கொண்டும், அறிவைக் கொண்டுமே முடிவு செய்துகொள்கிறோம். இந்த எண்ணமே கர்மாவுக்குக் காரணம். இதில் சுகம் துக்கம் என்பது ஆத்மாவுக்கு சம்பந்தப்பட்டதல்ல. ஆத்மாவுக்கு எதனாலும் அதிக சுகம் ஏற்படுவது என்பது கிடையாது. ஆத்மா ஸ்வயமாகவே சுகரூபமானது என்பதை நாம் [illegible] தூக் [illegible] (...பதயால) ஒரு வஸ்துவும் இல்லாமல் இருக்கும்போது நாம் சுகத்தை அனுபவிக்கிறோம். "நான் சுகமாகத் தூங்கினேன்" என்று காரணமில்லாமல் சொல்கிறான். ஆகவே அந்த 'நாம்' சுகரூபமானது என்று அறியவேணும். வேதத்தில் பல இடங்களில் "ஆத்மா ஸுகரூபமானது" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

தவிர, பிரும்மத்துக்கும் சிருஷ்டிக்கப்பட்ட உலகுக்கும் சம்பந்தம் அற்றதால் உலகில் உள்ள எந்த வஸ்துவுக்கும் பிரும்மத்துக்கு ஸுக துக்கத்தை உண்டுபண்ணும் சக்தி இல்லை. ஆகவே நம்முடைய நோக்கத்தில் ஸுகம், துக்கம் என்று சொல்லப்பட்டவை நம்முடைய ஆசையின் காரணமாய் ஏற்பட்டவையே, இது அக்ஞானத்தால் உண்டானது.

சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களைக் கவனிப்போம். அவைகளும் அஜ்ஞானத்தால்தான் ஏற்பட்டவை என்று தீர்மானமானுல் கர்மாவிருலேயே மோக்ஷம் உண்டாகிறது என்று சொல்பவர்களின் மதம் முற்றிலும் பாதிக்கப்படும். சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கர்மாக்களை நாம் செய்கிறேம் என்பதாலேயே அது ஞானத்துக்குக் காரணம் என்று கொள்ளக்கூடாது. ஏனெனில் அவை குறிப்பிட்ட முறைப்படி செய்யப்படுவதால் குறிப்பிட்ட பிரயோஜனத்தை அடைவதற்காகச் செய்யும்படி சொல்லப்பட்டவை. நமக்கு பிரத்யக்ஷமாய்த் தெரியமுடியாததை நாம் அடைய விரும்பினுல் அப்போது சாஸ்திரத்தின் உதவியை நாடுகிறேம். அது வழியைக் குறிக்கிறது. ஆனுல் இந்த பிரயோஜனத்தை வேண்டுவது சாஸ்திரத்தினுல் ஏற்படுவதில்லை. அது முன் சொன்னபடி அக்ஞானத்தினுல்தான் ஏற்படுகிறது.

ஆகவே பிரத்யக்ஷம், அனுமானம் சுருதி என்ற காரணங்களினுல் ஆத்மா ஸுகரூபமானது, துக்கக் கலப்பில்லாதது என்று கிடைக்கிறது. சுகத்தை அடைய விரும்புவதோ, துக்கத்தைத் தவிர்க்க எண்ணுவதோ ஆத்மாவின் வாஸ்தவமான ஸ்வரூபத்தை அறியாமல் இருப்பதாலேதான். ஸுகம் அடையவேண்டும் துக்கம் வரக்கூடாது என்ற எண்ணத்துக்கும் சாஸ்திரத்துக்கும் சம்பந்தமே கிடையாது. ஏனெனில் இந்த எண்ணம் சாஸ்திர வாசனையே இல்லாத பசு முதலிய பிராணிகளுக்கும் இருக்கிறது. ஆகையால் இது செய்யவேண்டும் இது செய்யக்கூடாது என்ற சாஸ்திரக் கட்டளைகள் ஆத்மஞானமில்லாதவனுக்குச் சொல்லப்பட்டதே தவிர வேறல்ல. ஆகவே சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களும் அக்ஞானத்துக் குட்பட்டவையேயாம். இதனுல் ஆத்மஞானத்தை அடைய விரும்புபவனுக்கு சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட கர்மாக்கள் உபயோகப்படாது என்று

இனி மோக்ஷம் அடைவதற்கு கர்மா தேவையில்லை. அதனல் அடையவும் முடியாது என்பதைத் தெளிவாக்கு வோம். ஆத்ம ஞானம் புத்தி விசேஷத்தால் ஏற்படும், கர்மாவினுல் முடியாது என்பதை இனி நிரூபிக்கிறோம். நாம் அடையவேண்டும் என்பது நான்கு வகைப்படும்.

1. தன்னிடத்தில் ஒரு வஸ்து இருக்கும்போதே அது இல்லை என்று எண்ணி அதை அடையவேண்டுவது.

2. தன்னிடத்தில் இல்லாமல் இருக்கும் போது அது இருப்பதாய் எண்ணிக்கொண்டு அதை நீக்க முயல்வது.

3. இல்லாததை வேண்டுவது.

4. இருப்பதைத் தேவை இல்லை என்று தள்ளுவது.

1. ஒரு பெண்மணி கழுத்தில் மணிமாலையை அணிந்து கொண்டிருக்கிறவள் அது இருப்பதைத் தெரிந்து கொள்ளாமல் அதை அடையவேணும் என்று விரும்பலாம்.

2. அதுபோல் தன்னுடைய நிழலையே கண்டு அது பிசாசு என்று பயந்த மனிதன் பிசாசை ஓட்ட எண்ணலாம்.

3. வாஸ்தவமாகவே இல்லாத பொருளை அடைய விரும்பலாம்.

4. வாஸ்தவத்திலேயே தன்னிடம் கெடுதலைப் போக்கிக்கொள்ள எண்ணலாம்.

மேலே சொன்ன 3, 4 அயிட்டங்களில் நம்முடைய முயற்சி அவசியமாகிறபடியால் கர்மாவுக்கு இடமுண்டு. ஆனல் 1, 2 அயிட்டங்களில் கர்மாவுக்கு ஏது இடம்? அறிவிற்கல்லவோ இடம் உண்டு. கழுத்தில் மாலை இருக் கிறது என்ற அறிவினுலும், பிசாசு இல்லை அது தன் நிழல் தான் என்று அறிவதாலும் முடிவு கிடைத்துவிடுகிறது இதில் கொஞ்சமும் கர்மாவுக்கு இடமே இல்லை, இடையில்

**உள்ள அக்ஞானமே துக்கத்துக்குக் காரணமாக அது நீங்குவது ஞானத்தாலன்றி கர்மாவினால் இல்லை.**

இதுபோல் ஆத்மாவின் நிலை இணையற்ற சுகரூபம் அது எப்போதும் நம்மிடமே உள்ளது. அந்த சுகத்தை அடைவது என்பது வேறெங்கும் இல்லை. இதற்கு கர்மா ஏதும் தேவை இல்லை. உபயோகமும் ஆகாது. நம் அக்ஞானத்தால் நாம் ஆத்மா அல்ல என்று எண்ணுகிறோம். ஆகையால் ஆத்மாவை அடைவதற்கு ஞானம் ஒன்றுதான் வழி. இதற்கு அக்ஞானம் தடை செய்கிறது. இதை நீக்க வேணும். கர்மா அக்ஞானத்தால் ஏற்படுவது. அக்ஞானத்துடன் கூடியது. இது அக்ஞானத்துக்கு விரோதமானதில்லை ஆகையால் அக்ஞானத்தை இது நீக்காது.

கர்மா அக்ஞானத்தால் உண்டாகிறது என்பதுபோல் ஞானமும் அப்படியேதானே. வேதங்களில்லாமலும், குருவின் உபதேசமில்லாமலும் ஞானம் ஏற்படுவதில்லையல்லவா? ஆகவே கர்மாவினால் அக்ஞானம் நீங்காது எனில் அதேபோல இந்த ஞானத்தினாலும் அந்த அக்ஞானம் நீங்காது. ஏனெனில் இரண்டும் அக்ஞானத்திலிருந்து தோன்றுகின்றன.

பதில்: அப்படி அல்ல. அவைகளில் வித்யாஸம் உண்டு. கர்மாவுக்கு அக்ஞானம் காரணமாவதுடன் அந்த அக்ஞானத்திலேயே இருக்கவேண்டி இருக்கிறது. கர்மாவுக்கு ஒரு கர்த்தா (செய்பவன்) தேவை. செய்பவன் என்று ஒருவன் இருக்கிறான் என்பதே அக்ஞானமல்லவா. கர்மா பலனைக்கொடுப்பதற்கு காலமும் கொஞ்சம் தேவை. யாகம் செய்தவுடனேயே ஒருவன் ஸ்வர்க்கம் போவதில்லையே. பலனைக்கொடுப்பதற்கு கர்மா தொடர்ந்து இருக்கவேணும் அதற்கு செய்பவன் என்பவனும் அவசியம்

ஞானத்தின் விஷயத்தில் இப்படி அல்ல. ஆரம்பத்தில் இது அக்ஞானத்திலிருந்து உண்டானாலும் இது நீடித்து

நிலைப்பதற்கு அக்ஞானம் தேவை இல்லை ஸ்வதஸ்ஸித்த மான பரமாத்மாவையே ஆசிரயித்து ஞானம் இருப்பதால் வேதத்திலிருந்து (படிப்பிலிருந்து) இந்தஞானம் உண்டா னாலும் அக்ஞானத்தைப் போக்கிவிடும். அதற்கு வேதம் தேவை இல்லை. மேலும் கர்மாவைப்போல பலனைக் கொடுப்பதற்கு இங்கு காலதாமதம் தேவை இல்லை, ஞானம ஏற்பட்டவுடனேயே அக்ஞானம் நீங்கிவிடுகிறது.

ஆகவே ஞானம் வேதம் முதலியவைகளிலிருந்து ஏற் பட்டாலும் வேறொன்றைத்தழுவி நிற்கவேண்டிய நிலையில் இல்லாததால் துக்கதுக்குக் காரணமான அக்ஞானத்தை உடனே போக்குவதறகு சக்தியுள்ளதாகிறது. இதனாலும் கர்மா மோக்ஷத்துக்குக் காரணம் என்ற கொள்கை நிராகரிக்கப்படுகிறது.

ஸந்தேகம்: இந்த ஞானமும் அக்ஞானத்துடன் கலந்து இருக்கிறதுபோல் காண்கிறதே. ஏனெனில் ஞானத்தை அடைந்தவர்கள் கூட அக்ஞானத்தால் பாதிக்கப்படுவதாய் காண்கிறோமே. தங்களுக்கு அனுபவம் உண்டு என்று சொல்பவர்கள் கூட உலகப் பற்றுள்ளவர்களாகவும் காணப் படுகிறார்களே அக்ஞானம் இவர்களிடம் அடிப்படையாக இருந்தாலன்றி இந்த அனுபவம் ஏற்படாதே.

— இது தவறான அபிப்பிராயம். வாஸ்தவமாக ஞானம ஏற்பட்டால் அக்ஞானம் நசித்துவிடுகிறது. ஆகையால் பின்னிட்டும் கூடவே இருக்கிறது என்பது அஸம்பாவிதம் ஞானம் வந்த பின்பு மறுபடியும் அக்ஞானம் தோன்றி இரட்டை தோற்றம் ஏற்படும் என்று சொன்னால் அது ஒப்புக்கொள்ள முடியாது. ஏனெனில் ஞானத்தின் சக்தி அப்போது பூர்ணமாக இருக்கும். மறுபடி அக்ஞானத் தின் காரணமாக ஏற்படும் தோற்றங்களுக்கு இடமே கொடுக்காது என்பது நிச்சயம்.

வேதத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களுக்கு ஒருவன் அதிகாரியாகிறான் என்றால் அவனுக்கு அக்ஞானம் இருக்கிறது. சரீரத்தை ஆத்மா என்று எண்ணுகிறான் என்று தான் கொள்ளவேணும். சுருதியில் பல வர்ணத்தவர்களுக்கு பல கர்மாக்கள் நியமிக்கப்பட்டிருக்கின்றன என்று தெரிகிறது. பிராம்மணனாகவோ க்ஷத்திரியனாகவோ பிறந்தால் அவனவனுக்குத் தனித்தனி கர்மாக்கள் விதிக்கப் பட்டிருக்கின்றன. பிராம்மணன் க்ஷத்ரியன் இதுமுதலான பாகுபாடு சரீரத்தை ஒட்டியதேயாம். பிராம்மண மாதா பிதாக்களுக்குப் பிறந்ததுதான் இதற்கு காரணமும் அடையாளமுமாகிறது. இது ஆத்மாவுடன் சம்பந்தப் பட்டதல்ல. ஆகையால் வேதத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களில் நாம் ஈடுபடும்போது இந்த அக்ஞானம்தான் அதற்குக் காரணமாக ஆகிறது. இந்த அக்ஞானத்திலிருந்து நாம் விடுபடுவோமானால் நாம் வேதத்துக்குக் கட்டுப்பட்டவர்களாக மாட்டோம்.

ஆனால் நம் மனதில் அக்ஞானம் இருக்கும் வரையில் வேதத்தில் சொல்லப்பட்ட விதி, நிஷேதக் கட்டளைகளுக்கு உட்பட்டவர்களாகவே ஆகிறோம். இதனால் புண்ய கர்மாவை செய்தால் தேவர்களாகவும், பாப கர்மா செய்தால் நரகவாசிகளாகவும், இரண்டும் கலந்த கர்மா செய்தால் மனுஷ்யர்களாகவும் தோன்றுகிறோம். இப்படித்தான் உலகில் மேற்பட்டது முதல் கீழ்பட்டதுவரை உள்ள ஜீவராசிகள் தோன்றி, அக்ஞானத்தின் காரணத்தால் ஆசைகள் உண்டாகி திரும்பத்திரும்ப இறந்து பிறந்து, துக்கங்களை அனுபவிக்கிறார்கள். ஆசைதான் ஜனன மரணத்துக்குக் காரணம். ஆகையால் அதை ஒழிக்க வழி தேடவேணும். இதற்கு ஞானம் ஏற்பட்டு அக்ஞானம் ஒழிதலே வழி. இதைத்தான் வேதம் சொல்லுகிறது இந்த ஞானம் வந்தால் மோக்ஷமேற்படும்.

இதுவரை கர்மாவினால் மோக்ஷம் அடையமுடியாது ஞானத்தினால்தான் முடியும் என்று நிரூபிக்கப்பட்டது.

அப்படியானல் கர்மா முற்றிலும் உபயோகமற்றதா என்ருல் இல்லே. அவைகள் படிப்படியாக ஞானத்தைப் பெறுவதற்கு உதவுகின்றன. எப்படியெனில் ஒருவன் உலகில் உள்ள கஷ்டங்களினுல் மனம் நொந்துபோகும்போது நித்யமான கர்மாக்களேச் செய்வதால் வைராக்யத்தைப் பெறுகிருன். நரகம் வரும் என்று பயந்து பாபகர்மாவை எவ்விதம் அவன் செய்வதில்லேயோ, அதேபோல் காமிய கர்மாக்களே செய்வதால் பலன் ஏற்படுமே என்றும் பயப்படுகிருன். ஆகையால் காம்மியமான கர்மாக்களேயும் விட்டுவிட்டு நித்யமான (செய்யப்படவேண்டும் என்ற) கர்மாவை மட்டும் செய்கிருன். இதைச்செய்வதால் பாபங்கள் நீங்கி அவன் மனது பரிசுத்தத்தை அடைகிறது. தான் செய்யும் கர்மாக்களுக்கு பலனே அவன் விரும்புவதில்லே. அதை ஈசுவரார்ப்பணமாக செய்கிருன்.

இந்த உலகத்திலும் மேல் உலக சுகங்களிலும் பற்றற்ற கிருன். இவன் மனம் எதிலும் ஆசைப்படுவதில்லே. ராகதுவேஷாதிகளான துவந்துவங்கள் இவனே பாதிப்பதில்லே. வெளி உலக வஸ்துக்கள் இவனே இழுப்பதில்லே. மனதில் சுத்தம் ஏற்படுவதால் அது நிர்மலமாகி, ஆத்மாவை தியானம் செய்ய லாயக்குள்ளதாக ஆகிறது. மனம் உள் நோக்குடையதாக ஏற்படுகிறது. இவனுக்கு செய்ய வேண்டும் என்பது ஏதும் கிடையாது. கர்மாக்களினுல் ஏற்படவேண்டிய லாபம் கிடைத்துவிட்டது. அதனுல் அவைகளுக்கு முடிவும் ஏற்பட்டுவிட்டது. இந்த நிலே நிஷ்காம்யமாக கட்டாயம் செய்யப்படவேண்டும் என்பதை மட்டும் செய்வதால் ஏற்படுவதால் மோக்ஷத்தில் விருப்பமுடையவன் இந்த சித்த சுத்தியை பெறுவதற்காகவே இதுபோன்ற நித்ய நைமித்திக கர்மாக்களேச் செய்ய வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

இந்தக் கர்மா நேரடியாக மோக்ஷத்தைக் கொடுக்காது. பரம்பரையாக சித்தசுத்தியைக் கொடுத்து அதன் மூலமாக

மோக்ஷம் கிடைக்கக் காரணமாகும். இதுதான் பகவத் கீதை 6வது அத்தியாயத்தில் 3வது சுலோகத்தில் 'தியான யோகத்தை அடையவேண்டும் என்று இச்சிக்கிற முனிவனுக்கு நிஷ்காம்ய கர்மா சாதனமானது என்றும், தியான யோகத்தை அடைந்த அவனுக்கே துறவு (சமம்) சாதனமானது' என்றும் சொல்லப்படுகிறது.

(கர்தவ்யம் செய்யப்படவேண்டும் என்று செய்யப் படும்) நித்ய நைமித்திக கர்மாக்களுக்கு சில தர்மங்கள் உண்டாகின்றன. நம் பாபங்கள் நசிக்கின்றன. மனம் சுத்தமாகிறது. இந்த உலகம் நாசத்தை உடையது என்று எண்ணுவதற்கு சௌகரியம் ஏற்படுகிறது. அப்போது சாசுவதமில்லாத உலகை விடுத்து மோக்ஷத்தைப்பெற வேண்டும் என்ற ஆசை தோன்றுகிறது, உடனே அந்த வழியைத்தேட பிரயத்னம் செய்கிறோம், பிறகு மேற்படி கர்மாவை முற்றிலும் விட்டுவிடுவதன் மூலம் தியானத்தில் மனம் ஈடுபடுகிறது. உள்நோக்கும் வழியை நாடுகிறது. அப்போதுதான் "தத்வமஸி" என்ற மகாவாக்யத்தின் சூக்ஷ்மத்தை உணரமுடிகிறது. அஞ்ஞானம் நீங்குகிறது, முடிவில் ஆத்ம ஸாக்ஷாத்காரம் நிலைக்கிறது. இப்படி அக்ஞானத்தை நாசம் செய்வதற்கு கர்மா பரம்பரையாக உபயோகமாகிறது. ஆனால் நேரடியாக மோக்ஷத்தைக் கர்மா கொடுக்க முடியாது. ஞானம் ஏற்படுவதற்கு உபயோகமான சூழ்நிலையைத்தான் உண்டுபண்ணமுடியும். ஏனெனில், உண்டுபண்ணுதல், அடைதல், தூய்மைப் படுத்துதல், மாறுபாடு செய்தல் என்ற கர்மாக்களின் நான்கு வகையான விளைவுகளுள் மோக்ஷம் எதிலும் அடங்கவில்லை. ஆகையால் முக்திக்கு கர்மா ஸாதனமல்ல என்பது நிச்சயம்.

இதுவரை கர்மா தானாகவே மோக்ஷத்தைக்கொடுக்க முடியாது என்பதை உணர்ந்தோம். ஆனால் இது ஞானத்துடன் சேர்ந்து மோக்ஷத்தை உண்டுபண்ண முடியுமா முடியாதா என்ற விஷயத்தைக் கீழே பரிசீலனை செய்வோம்,

கர்மா முக்திக்கு முக்கிய ஸாதனம். ஞானம் அதற்கு அங்கமாகச் சேர்ந்து மோக்ஷத்திற்கு உதவுகின்றது என்று சொன்னால் இரண்டும் ஒரே சமயத்தில் ஓரிடத்திலேயே இருக்கவேண்டியதாகும். இது ஸாத்தியமில்லை என்று காண்கிறோம். கர்மா ஞானத்தை உண்டாக்குவதற்குத் தகுந்த சூழ்நிலையை ஏற்படுத்துகிறது. ஆகையால் ஞானம் பின்னிட்டு உண்டாகப்போவது. கர்மா முடிந்தபின் தான் இது உண்டாகும். அல்லது கர்மா ஒழிவதாலுண்டாகும். ஆகவே ஞானம் கர்மாவுக்குட்பட்டதாக ஆகாது.

முக்தியை அளிப்பதில் இரண்டும் ஸமமான ஸாதனமாக இருக்கலாமோவென்றால் அதுவும் முடியாத காரியம். ஏனெனில் ஒன்றிற்கொன்று விரோதமுள்ளவை ஒரே சமயத்தில் ஓரிடத்தில் அவை இருக்காது.

இன்னமும் விளக்குங்கால் கர்மா என்பதற்குக் காரணம் அஞ்ஞானமேயாம். இது ஞானம் ஏற்பட்டால் நிற்காது. கர்மாவுக்கு ஸாதனம் தேவையானது ஸாதனம் என்பது சாசுவதமல்ல, உண்மையில்லாதது. இது அஞ்ஞானத்தாலும் மாயையினாலும் தோன்றுவது. நாசம் உள்ளது. ஆகவே கர்மாவும், ஞானமும் ஒரே இடத்தில் இருக்கமுடியாது. இருட்டும் வெளிச்சமும்போல இவை இரண்டும் எப்போதும் சேர்ந்து இருக்கமுடியாது.

ஒருவன் ஆத்ம ஞானம் பெறும்போது, அவனுக்குக் காரியம் என்பது அற்றுப்போய் விடுகிறது. ஆகவே வேதத்தின் கட்டு திட்டங்களுக்கு அப்பால்பட்டவனாகிறான். எப்படி பிராம்மணன் க்ஷத்திரியனுக்கு வகுக்கப்பட்ட கர்மாவையும், க்ஷத்திரியன் பிராம்மணனுக்கு வகுக்கப் பட்ட கர்மாவையும் செய்வதில்லையோ அதுபோலவேதான். தேகத்துக்கு எவ்வித சம்பந்தமும் இல்லை என்று ஞானி எண்ணுவதால் அவனுக்கு கர்மாவின் சம்பந்தமும் கிடையாது. குழந்தை மரக்குதிரையின்மேல் ஏறி சவாரி

செய்வதுபோல மனிதன் அச்ஞானத்தினால் சரீரத்தையே ஆத்மாவாக எண்ணுகிறான்.

ஆனால் உலக வியவஹார நிலையில் ஞானமும் கர்மா வும் சேர்ந்து வேலை செய்யலாம். அதாவது ஒரு மரத்தின் அடிக்கட்டையை திருடன் என்று எண்ணிக்கொண்டதால் பயந்தவன் ஓடுகிறான். அந்த பொய்யான தோற்றத்துக்கும் அவனுடைய ஓடுதல் என்ற காரியத்துக்கும் அப்போது சம்பந்தம் உண்டு. இதேமாதிரி மனிதன் அக்ஞானத்தால் கட்டுண்டு இருக்கும் நிலையில் சரீரமே ஆத்மா என்று எண்ணுவது சகஜம். ஆனால் முன்சொல்லிய உதாஹரணத் தில் கட்டையின் வாஸ்தவரூபத்தைத் தெரிந்தால் ஓடுவது என்பது நின்றுவிடும். அதுபோல் ஞானமும் அச்ஞான காரியத்துடன் சேர்ந்து இருக்காது என்று அறியவும். ஆகவே ஆத்மச்ஞானம் அச்ஞான காரியத்துடன் எவ்வழி யிலும் சேர்ந்து இருக்க முடியாது.

ஒருகாரியத்தைச் செய்வதற்கு அறிவு தேவையாகிறது. தெரிந்தாலன்றி கார்யத்தைச் செய்யமுடியாது. ஆனால் அதேமாதிரி ஞானம் என்பது காரியமாகாது. ஞானம் உண்டானவுடனேயே காரியமாகிய அச்ஞானம் நாசமடை வதால் ஞானத்திற்குச் சேர்ந்தது கர்மா என்றும் சொல்ல முடியாது. உண்மையான ஆத்மஞானம் பெறுவதால் அக்ஞானம் நசித்துத்தான் ஆகவேணும். அதுபோனால் செய்யவேண்டியதோ செய்யப்படும் வஸ்துவோ ஏதும் மீதமிருப்பதில்லை.

ஞானத்துக்கும் கர்மாவுக்கும் மூலகாரணம் யாது எனப் பார்ப்போம். ஞானம் உண்மையை விளக்கும் ஒளி மோக்ஷத்தைக் கொடுக்கிறது. ஆனால் கர்மாவோவெனில் அச்ஞானத்திலிருந்து ஆசையினால் உண்டாகிறது. இதனால் விளக்கம் ஏற்படுவதில்லை. ஒரு பலனை உண்டு

அம்சங்கள் அடங்கிய இந்த ஞானமும் கர்மாவும் ஒன்ருகக் கூடி இருக்கமுடியாது.

சிலரின் அபிப்பிராயமாவது "நானே பிரும்மம்" என்ற சுருதி வாக்கியத்தினுலுண்டாகும் ஞானம் அக்ஞானத்தைப் போக்கடிக்கப் போதுமானதல்ல. அதைத்தொடர்ந்து அப்யாஸம் செய்து அதன் காரணமாய் ஏற்படும் ஞானத்தால் தான் அக்ஞானம் நிவர்த்தியாகும். ஆகவே அந்தவிதத்தில் பின்னிட்டு அப்யாஸம் செய்யும் நிலையில் இரண்டும் சேர்ந்த தாக ஆகிறது என்பது.

இன்னும் சிலரின் கருத்து யாதெனில், 'நானே பிரும்மம்' என்ற வாக்கியத்தால் ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படாது. ஏனெனில் அந்த அறிவு எண்ணத்தினுல் உண்டானது. சுத்தபிரும்மத்தைக் காட்டாது என்பதே. இதை இடை விடாது தியானிப்பதால் வேருெரு ஞானம் உண்டாகிறது. அதுதான் அக்ஞானத்தைப் போக்கடிக்கிறது என்கிருர்கள். இவ்விரண்டும் சரி என்று ஏற்பட்டால் ஞானமும் கர்மாவும் சேர்ந்து வேலை செய்வதால்தான் மோக்ஷம் ஏற்படும் என்ருகும். ஆனுல் இந்த இரண்டும் தவருனது என்பதை நிரூபிப்போம்.

"நானே பிரும்மம்" என்ற எண்ணத்தை சொல்லிச் சொல்லி நிலைநிறுத்துவது என்பது. மனதை ஒரே நிலையில் இருக்கும்படி செய்து அதில் இடையூருன எண்ணங்களோ தோற்றங்களோ வராமல் இருக்கும்படி செய்வதற்காகவே தான். இதை இடைவிடாமல் சொல்வதனுல் இது சித்திக் கிறது. மனம் ஓர் நிலைப்படும்போது "நானே பிரும்மம்" என்றதின் தத்வார்த்தம் தானே விளங்கும் இங்கு கர்மா வுக்கு இடமே கிடையாது.

ரை ஒன்ருகிய பிரும்மத்தை அறிவதற்கு ஞான மும் கர்மாவும் சேர்ந்து சாதனமாக முடியாது என்று சொன்னேம். இன்னெரு வழியிலும் இதை நிரூபிப்போம்

ஜீவனும் பிரும்மமும் ஒன்றே என்ற அடிப்படையின்பேரில் இதுவரை சொன்னோம். இதை சிலர் ஒப்புக்கொள்வதில்லை அவர்களில் இரு கக்ஷியினர்கள் உளர். ஒரு சாராரின்படி ஜீவனுக்கு பரமாத்மாவிடம் ஒற்றுமையும் உண்டு. வேற்றுமையும் உண்டு. மற்றோர் சாராரின்படி ஜீவனாக இருக்கும் நிலையில் வேற்றுமையேதான். அதைக் கடந்த பின்புதான் (அதாவது மோக்ஷ தசையில்) ஒற்றுமை உண்டு. இந்த இரண்டு கக்ஷிகளின் கொள்கைப்படி பார்த்தாலும் ஞானமும் கர்மாவும் ஒன்றுபட்டு செயலுடையதாக ஆகாது என்கிறோம்.

எப்படியெனில் இரண்டுக்கும் ஒற்றுமை இருக்குமாகில் நமக்குத் தோன்றும் ஒற்றுமை இன்மை பிரமையாகும். அந்த ஒற்றுமையை அறிவதற்கு பிரமையை நீக்குவதே வழியாகும். இது ஞானத்தினால்தான் கூடுமே தவிற கர்மாவினால் முடியாது. இரண்டுக்கும் முற்றிலும் வித்தியாஸமே உள்ளது எனில் அதில் ஞானமோ கர்மாவோ பயனை யளிக்காது. அல்லது பிரும்மத்தை அடைந்தும் அதை ஏதோ ஒன்று தெரியவொட்டாமல் பூதம்போல் மறைத்துக் கொண்டிருக்கிறது என்று சொன்னாலும் மறைத்துக் கொண்டிருக்கும் அக்ஞானத்தைப் போக்க ஞானம் சாதனமே தவிற கர்மாவால் பயனில்லை.

பிரம்மமும் ஜீவனும் வெவ்வேறானவை என்று சொன்னால் கர்மா தனியாகவோ ஞானத்துடன் சேர்ந்தோ அதை ஒன்று என அறியமுடியாது. (இருபொருளும் உண்மைப் பொருள் என்று கொண்டால் அவை இணைந்து ஒன்றாக முடியாது. அப்படி இணைந்து ஒரே பொருளாகும் என்றால் முதலில் ஒப்புக்கொண்ட இரு பொருள்களின் (ஜீவ-பிரமம்) பாரமார்த்திக ஸத்தியத்தன்மை போய்விடும் என்பது இதன் விளக்கமாகும்) காரணம் யாதெனில் நம்மை விட (ஜீவனை விட) பிரம்மம் வேறு என்றால் அதை எப்படி ஒன்றாக்கமுடியும்? இவை இரண்டும் தனித்தனியாகவே

தானிருக்கும். மற்ற கக்ஷியினர் சொல்வதுபோல் ஒற்றுமை யும் வேற்றுமையும் உலகில் கலந்தே இருக்கிறது என்று சொல்வோமானால் ஜீவனே பிரும்மம் என்று தீவிரமாக தியானித்தலே இதற்கு வழியாகும். "நீயே அதுவாகிறாய்" என்ற வேத வாக்கின் அர்த்தத்தால் மட்டும் அது கிடைக்காது. இங்கும் சிந்தனைசெய் என்ற கட்டளையின்படி இவர்களுக்கு ஞானம்தான் வழி காட்டுமே தவிற, வெளிக் காரியங்களால் ஏதும் பயனில்லை. ஜீவனிடத்திலும் பிரம்மத்திடமும் ஒற்றுமை உண்டு என்று சொல்பவர்களுக்கு தியானம் செய் என்ற கட்டளையும் தேவையில்லை. வித்யாஸமே இல்லாமல் இருக்கும்போது வெளிக்காரியமோ அல்லது மனதினுள் வேலையோ இதற்கு தேவையே இல்லை.

ஜீவனுக்கும் பிரும்மத்துக்கும் பேதமில்லை என்று சொன்னால், நானே பிரும்மம் என்ற எண்ணம் தொடர்ந்து இருந்துகொண்டு வேறு எண்ணம் தோன்றாமல் இருந்தாலே (கங்கையின் வெள்ளம்போல் தொடர்ச்சி இருந்தால்) இரட்டை என்று எண்ணுபவர்களும் முக்தியை அடைவார் கள். அபேதம் உண்மை என்று ஏற்றால் அந்த உண்மை யின் விளைவான முக்தி கற்பிதமான பேதபுத்தி உள்ளவர் களுக்கும் ஏற்படுவதில் தடை இல்லை என்று ஏற்பட்டு விடுமே.

ஜீவனும் பிரும்மமும் வெவ்வேறு கர்மாக்களை ஜாதி தர்மத்தின்படி செய்யவேண்டும் என்ற கக்ஷியை ஆதரிப் பார்கள். அப்போது ஜீவ பிரும்ம ஐக்கியம் என்று சொல்லும்போது பல கலவரம் உண்டாகும் யார் எந்த கர்மாவைச் செய்வது யாருடைய கர்மாவினால் எந்தவித மான பிரும்ம ஸாயுஜ்யம் ஏற்படும். எல்லாரும் அடையும் பிரும்மம் ஒன்றுதானா, ஒவ்வொரு ஜீவனும் தனித்தனியாக அவனவன் தனித்தனியாக பிரும்மமானால் வெவ்வேறு வருணத்தாருக்கு வெவ்வேறு கர்மா எதற்கு ?

ஒவ்வொரு ஜீவனிடமும் பிரும்மம் இருந்தாலும் அந்த வருணத்தவருக்குள்ள கர்மா அவனுக்கு உண்டு என்று சொன்னால் இதுவும் பொருந்தாது. ஏனெனில் இவன் பிரும்மம் என்றால இவனுக்கு ஒரு ஜாதி உண்டு என்று சொல்வது முற்றிலும் தவறல்லவா. ஞானம் வந்தவுடன் இந்த பேதம் நீங்கிவிடவேணும். பேதம் இருப்பதாக ஒருவன் எண்ணினால் அவனுககு ஞானம் வந்ததாக சொல்ல முடியாது. அது அவனுக்கு உபயோகமற்றதாகிறது. இவன் அக்ஞானத்துடன் இருப்பதாகவே கருதப்பட வேண்டும். அக்ஞானி கர்மாவைச் செய்துகொண்டு தானே இருப்பான்.

பிரம்மம் தனியாகவும் இருக்கும். ஒவ்வொரு ஜீவனிடத்திலும் வெவ்வேறாக பலவாகவும் இருக்கலாமே. என்று சொல்பவர் கக்ஷியைப் பார்ப்போம். ஒன்றாகவும் பலவாகவுமிருக்குமானால், கர்மாவுமே (பலர் செய்வதால்) பிரம்மமாகிவிடும். அப்படியானால் இதைச்செய்யவேண்டும் என்ற வேதவாக்கிய கட்டளைக்கும் இடமே இல்லை, ஒன்றை அடைவதற்கல்லவோ காரியத்தைச் செய்யவேண்டும். அடைந்ததாகிவிட்டால் அதில் காரியத்துக்கு இடமேது. ஆகவே ஜீவனே பிரம்மம் என்று ஒப்புக்கொண்டால் ஞானத்துக்கு கர்மாவின் சம்பந்தமே கிடையாது என்பது தெளிவாகிறது.

சந்தேகம்: ஜீவன் பிரும்மத்திடம் சேர்ந்ததாயும் பிரிந்ததாயும் இருக்கலாமே. ஞானம் வரும்போது ஒற்றுமையும் கர்மா வரும்போது வேற்றுமையும் இருக்க லாகாதா?

பதில்: கேள்வியே ஒன்றுக்கொன்று முரண்பாடுள்ள தாக இருக்கிறது. ஒற்றுமை இல்லை என்றால்தான் வேற்றுமை இருக்கும். இல்லாவிடில் இரண்டு பதங்களுக்கும் அர்த்தத் தில் வித்தியாஸமில்லாமல் போகும். இப்படி ஒற்றுமையும் வேற்றுமையும் கலந்து இருக்கிறது என்றால் பிரும்மத்துக்கு

பெருத்த கஷ்டம் ஏற்படும். ஒவ்வொருவர் படும் துக்கத்துக்கும் பிரும்மமும் சம்பந்தப்பட்டதாகும். இதை யாரும் ஒப்புக்கொள்வதில்லையே. ஆகவே இருளும் சூரியனும் எப்படி சேர்ந்து இருக்காதோ அதேபோல ஞானமும் கர்மாவும் ஓரிடத்தில் சேர்ந்து இருக்கமுடியாது என்று தீர்மானிக்கிறோம்.

மேலே கண்டபடி எல்லா காரணங்களையும் காட்டி இதை நிரூபித்தபோதிலும், முதலில் சொன்ன ஒவ்வொரு ஆக்ஷேபணைக்கும் ஸமாதானம் சொல்லப்படவில்லை என்று சிலர் கருதக்கூடுமாதலால், அவைகளை ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டு பதில் சொல்வோம்.

செய்யக்கூடாது என்று வேதத்தில் சொல்லியிருப்பதை செய்யாமலும், பலனை உத்தேசித்த கர்மாக்களை செய்யாமலும், தீராமல் செய்தே ஆகவேண்டும் என்று சொல்லப்பட்டவைகளை மட்டும் செய்தாலே முக்தி ஏற்படலாமே என்றது முதல் கக்ஷி.

இதற்கு பதில்: கர்மாக்களை எப்படித் தவிர்ப்பது ஏற்கனவே செய்த கர்மாவை தவிர்க்க இரண்டே வழிகள் உண்டு. பலனைக்கொடுக்க ஆரம்பித்திருக்கும் பிராரப்த கர்மாவை அனுபவத்தால் தீர்க்கலாம். பலனை இனிமேல் கொடுக்க இருக்கும் பாபகர்மாக்களை புண்ணியம் செய்து தவிர்க்கலாம். மூன்றாவதும் உண்டு. அதுதான் ஞானத்தினாலாவது. ஆனால் இந்த மூன்றாவது வழியை எதிர்க்கக்ஷியினர் ஒப்புக்கொள்வதில்லை. முன் செய்த புண்ணிய கர்மாக்களின் பலனை நாம் அடையாமல் எப்படித் தவிர்ப்பது என்று தெரியவில்லை. அவை ஆரம்பித்தவுடன் அவைகளை விட்டுவிடலாமே என்றால் அது முடியாததாகும் இனிமேல் செய்யக்கூடிய கர்மாவை செய்யலாம். செய்யாமல் விட்டுவிடலாம், ஆனால் ஏற்கனவே செய்ததைப்பற்றி நாம் சக்தியற்றவர்களாகிறோம். நமக்கு இஷ்டம் உண்டோ இல்லையோ அவைகளை அனுபவித்துத்தான் ஆகவேண்டும். புதிதாக

செய்யப்போகும் கர்மாவைப்பற்றி எவ்வித பந்தோபஸ்தும் செய்யமுடியாது. நல்ல அறிவாளிகள்கூட தவறுதல்களை செய்கிறார்கள். அதில் சிக்கிக்கொள்கிறார்கள்.

மேலும் மோக்ஷம் அடைய விரும்புபவன் நிஷ்காமியமான கர்மாவையே செய்துகொண்டு பிராரப்தத்தை அனுபவித்துத் தீர்ப்பான் என்று சொல்லவும் முடியாது. ஏனெனில் நாம் செய்துகொண்டிருக்கும் காரியங்கள் எல்லையற்றவை. அவைகளின் பலன் நம்மையேதான் சேரும். தவிற ஒரு காமிய கர்மாவால் மற்ற காமிய கர்மா பாதிக்கப்படாது. இரண்டிற்கும் பலன் உண்டு. அது போல் செய்யக்கூடாத ஒரு கர்மாவினால் மற்றொன்று பாதிக்கப்படமாட்டாது.

புண்ணியம் செய்வதால் பாபம் தீர்ந்துவிடும் என்பது போல் நித்ய கர்மாவினால் காம்ய கர்மா நசிக்கட்டுமே என்றால் அது முடியாததாகும். கடமையைச் செய்வதால் எந்த பிரயோஜனமும் ஏற்படுவதாய் சொல்லப்படவில்லை. பாபங்களை போக்கடிக்க புண்ணிய கர்மாவை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதுபோல் காமியமான கர்மாக்களை மாற்ற எந்த நித்திய கர்மாவும் செய்யப்படலாம் என்று சொல்லவில்லை. ஆகையால் கர்மாவை கர்மாவினால் மாற்ற முடியாது. ஒரு பாபத்தை மற்றொரு பாபத்தால் மாற்ற முடியாததுபோலவேயாம். ஆகவே கர்மாவினால் மோக்ஷம் அடையலாம் என்ற கொள்கையை ஒப்புக்கொள்ள முடியாது.

அடுத்த கேள்வி வந்தது. வேதம் பல இடங்களில் மேன்மையை அடைய கர்மாவையே குறிக்கிறதே தவிற ஆத்மஞானத்தைப்பற்றி குறிக்கவில்லையே என்று.

பதிலாவது:—ஒரு கர்மா நல்ல பலனைத் தரக்கூடியது என்றால் காமியமான பலனைத்தான் அது கொடுக்கும். இதிலிருந்து மோக்ஷத்துக்கு கர்மா காரணமாகும் ஞானமல்ல என்று முடிவு கிடைக்காது. மேலும் கர்மாவைப்பற்றி

வேதத்தில் அதிகமாகச் சொல்லப்பட்டு ஞானத்தைப்பற்றி சிற்சில இடங்களில் மட்டும் சொல்லியிருப்பதிலிருந்து வேதத்திற்கு கர்மாவில்தான் தாத்பர்யம். ஞானத்தில் அல்ல என்று சொல்லமுடியாது. ஞானத்தின் சக்தி, வேகம் அதுபற்றிப்பல இடங்களில் சொல்வதனால்தான் உண்டு என்று சொல்வது தவறு. ஒரு இடத்தில் சொல்லப்பட்ட போதிலும் ஆத்மஞானம் என்பது முக்யமானதாகவே ஆகும். பல இடங்களில் சொல்லப்படவில்லை என்று சொல்வதும் தவறு. ஆத்மஞானத்தைப்பற்றி அநேக இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

சந்தேகம் : வேதத்தில் மோக்ஷத்தை அடைவதற்கு கர்மாவைக் காரணமாகக்காட்டி இருக்கிறதே. "பரமாத்மா அறியப்படவேண்டும்" என்று. ஆகையால் இதில் ஒரு கடமையைக் குறிப்பிட்டிருக்கிறதல்லவா. இது காரியவச மானதல்லவா ?

பதில் : கர்மாவைச் செய்வது என்பது மனிதனுடைய இஷ்டத்துக்குட்பட்டது. ஆத்மஞானம் அடையவேண்டும் என்பது அதுமாதிரி அல்லவே. நம்முடைய இஷ்டத்துக்குட் பட்டதல்லவே. ஆகையால் இது வேதத்தின் கட்டளை என்று சொல்லமுடியாது. கட்டளை என்று எடுத்துக் கொண்டாலும் அடைய முடியாததை அது குறிப்பதில்லையே. நம்மிடத்தில் இருப்பதைத்தானே குறிக்கிறது.

சந்தேகம் : வேதத்தில் ஆத்மஞானத்தைப் பொருத்து பிரமாணங்கள் கூறப்படவில்லை எப்படி நம்புவது ?

பதில் : ருஜு ... செய்யப்படவேண்டிய விஷயத்தைப் பற்றி பிரமாணங்கள் சொல்லவேணும். ஸ்வதஸ் ஸித்த மாகவே உள்ளதைப் பொருத்து எதற்காகப் பிரமாணங்கள் தேவை ? நாம் பரமாத்மானந்தத்தை அனுபவிக்கிறோமே. இதற்குத்தனி பிரமாணங்களை எதற்காக கூறுவது ? ஒரு கர்மவுக்கு என்ன பலன் உண்டு என்பதை வேதத்திலிருந்து

அறிகிறோம். ஆனால் ஆத்மா ஸ்வயம்பிரகாசமானதால் ...ல் சந்தேகமோ அதன் நிவர்த்தியோ ஏது ?

சந்தேகம்:— வேதத்தில் நன்மை பயக்கக்கூடிய கட்டளை இருந்தாலன்றி கர்மாவுக்குக் காரணம் இல்லையே.

பதில்:—இது வெகு காலத்துக்குப்பின் பலனைக் கொடுக்கக்கூடியதும் உடனடியாக பிரத்யக்ஷ பலனைக் கொடுக்காததுமான கர்மாவைப்பற்றியே உள்ளது. (இறந்த பின்பு கிடைக்கும் பலன் வேதத்தில் குறிப்பிட்டிருப்பதால் அதில் நம்பிக்கை வருகிறது). ஆனால் ஆத்மஞான விஷயத்திலோ பலன் உடனடியாக பிரத்யக்ஷத்திலேயே கிடைத்துவிடுகிறதே, ஆகவே மேலே சொன்ன சந்தேகத்துக்கு இங்கு இடமில்லை. பலன் கிடைக்குமா கிடைக்காதா என்று சந்தேகம் தோன்றி அதைத் தெளிவு படுத்த வேத வாக்கிய பிரமாணம் தேடவேண்டிய அவசியமே இங்கு கிடையாது.

சந்தேகம்: ஜைமினி மகர்ஷி வேதத்திலிருந்து வாக்கியங்களை ஆதாரமாக காட்டி வேதம் கர்மாவைத்தான் ஆதரிக்கிறது என்கிறாரே.

பதில்: இது ஜைமினியின் மதம் என்று சொன்னால் சரியாகாது. அப்படியாகில் வேதாந்தத்தை விளக்கி பிரம்மத்தைப்பற்றிச்சொல்லும் சாரீரக சூத்ரங்களுக்கு அர்த்தமே இல்லாமல் போகும். ஆகையால் சாமான்யமாகத் தெரிந்துகொள்ள முடியாத விஷயங்களைக் குறித்து கர்மாவைச் செய்யவேண்டும் என்ற கட்டளைகள் உள்ள வேதவாக்யங்களைப்போலவே பிரும்மத்தைப்பற்றிச் சொல்லும் வேதவாக்கியங்களும் பிரமாணமானவைகள் என்பதேயாம். ஏனெனில் நாமாகவே தெரிந்துகொள்ள முடியாத விஷயங்களே கர்மாவைப்பற்றியுள்ள கட்டளைகள் கர்மாவை ஒட்டியவை. பிரும்மத்தைப்பற்றிச் சொல்பவை (தத்துவமஸி) தீர்மானமான விஷயங்களைக் குறிப்பதால் இதில் கர்மாவுக்கு இடமில்லை.

கேள்வி :—எப்போதும் நாம் கர்மாவை ஆயுள்பரியந்தம் செய்துகொண்டே இருக்கவேணும் என்றல்லவா சொல்லு கிறது.

பதில் :—ஆம் ஆனல் ஆத்மாவுக்கு எவ்வித காரியமு மில்லாமையால் கர்மாவைக்குறித்து சொல்லப்பட்ட கட்டளைகள் ஞானம் அடையாதவனுக்கே சொல்லப்பட்டது என்று உணரவேண்டும். மேலும் எதிர்கக்ஷியினரின் திட்டத்தின்படி இறந்தபின் அடையக்கூடிய பலனைக் கொடுக்கும் கர்மாக்களில் மனிதனின் மனம் நாடுவது கடினம் என்று ஒப்புக்கொள்கிருர்கள். ஆனல் அந்த அனுபவம் உண்டு என்று வேதம் சொல்லி நாம் நம்புவதால் இந்த சரீரம் போனபின்பும் நாம் இருப்போம் என்று நமக்கு நம்பிக்கை வருகிறது. ஆனல் சரீரமில்லாத ஆத்மாவுக்கு காரியம் என்பது எப்படி ஏற்படும்? ஜீவனே ஆத்மா என்று சொல்பவர்கள்கூட இந்த ஜீவநிலை மாறி, சரீரம் போனபின்பு எவ்வித உபகரணங்களுமில்லாமல் இருக்கும் நிலையில் வேதத்தின் (கர்மசம்பந்தமான) கட்டளைகளை எப்படி நிறைவேற்றமுடியும்?

மேலும், சுகம் துக்கம் இரண்டுக்கும் ஆத்மாவுக்கு சம்பந்தம் இல்லை. ஆத்மா உள்ளே அறிவினல் உணர வேண்டியது. சுகதுக்கங்கள் வெளி உலகமாகிய சரீரத் துக்கு சம்பந்தப்பட்டது. ஆதலாலும் சுகதுக்கங்களுக்கு அப்பால்பட்ட ஆத்மாவுக்கு கர்மாவினல் ஆகவேண்டியது ஏதும் இல்லை.

சரீரத்துக்கும் ஆத்மாவுக்குமே சம்பந்தமில்லை என்றல் ஆத்மாவுக்கும் வெளிஉலகத்துக்கும் எப்படி சம்பந்தம் இருக்கும்? ஆகவே சுவர்க்க லோகத்தில் சுகம் என்பது ஆத்மாவுக்கு எப்படி ஏற்படும்?

ஆகவே வேதத்தில் கண்ட கட்டளைகள் ஞானம் அடையாத சரீரத்தில் பற்றுதல் உள்ளவர்களுக்குத்தான் சொல்லப்பட்டது என்று தீர்மானிக்கவேணும்.

முன்பு ஆக்ஷேபணை கூறப்பட்டது. ஒரு வாக்கியத்துக்கு வினைச்சொல் இல்லாமல் இருக்காது. வினைச்சொல் காரியத்தையே குறிக்கும் என்று இதைப்பார்ப்போம். வாக்யத்திற்கு வினைச்சொல் தேவையே. ஆனால் இதை எங்கு வேண்டுமானாலும் நாம் போட்டுக்கொள்ள முடியாது. அல்லது "இருக்கும் நிலையை;' (நிகழ் காலத்தை) குறிக்கும் வினைச்சொல்லை செயலைக் குறிக்கிறது என்று கொள்ளவும் முடியாது. ஆகவே "நானே பிரும்மம்" "நீ தான் அது" என்ற வேத வாக்கியங்கள் இப்போது இருக்கும் நிலைமையைச் சொல்கின்றனவே தவிற இனிமேல் வரப்போகும் நிலையைக்குறித்து காரியத்தை செய்யச்சொல்வதாக அர்த்தம் கொள்ளக்கூடாது.

ஆகையால், எந்தவிதமான கர்மாவினாலும், (மனது, வாக்கு, சரீரம்) மனிதன் ஆத்ம ஞானத்தை அடைய முடியாது. ஞானத்தினால்தான் இதை அடைய முடியும் என்பது சித்தாந்தம், கர்மாவைச் செய்தல் என்பது யாகாதி காரியங்களை செய்பவனுக்கு உகந்ததே தவிற ஆத்ம ஞானம் பெற்றவனுக்கு அல்ல.

---

## இரண்டாவது அத்தியாயம்

தத்துவமஸி முதலிய வேத வாக்கியங்களை நாம் ஏன் சரியாக உணர்ந்துகொள்வதில்லை என்பதன் காரணங்களை இந்த அத்தியாயத்தில் பார்ப்போம்.

தத்துவமஸி (நீயே அது ஆகிருய்) என்ற வேத வாக்கியத்தின் பொருள் நன்கு விளங்காததற்குக் காரணம் "நீ" என்ற பதத்திற்கு எது பொருள் என்று உணராதது தான். ஒரு வாக்யத்தின் அர்த்தத்தை அறிய அதில் உள்ள சொற்களின் பொருளை முதலில் அறிந்திருக்கவேண்டும். ஆகையால் அதை அறிவோம்.

சந்தேகம்:—வேத பிரமாண வாக்கியத்திலுல்தான் ஆத்மஞானம் உண்டாகுமா, அல்லது வேறு வழியிலும் உண்டாகுமா, வேறு வழியில் இந்த ஞானம் ஏற்படுமானுல் அதற்கு வேத வாக்கியம் காரணமாகாதே. உதாரணமாக விராட் என்ற ஒரு புத்திசாலி 'என்னைத்தவிற வேறு வஸ்துவே இல்லை எனில் எதனுல் எனக்குபயம் உண்டாகும்' என்ருன். பிருகு 'யதோ வா இமானி பூதானி ஜாயந்தே' (எதிலிருந்து உலகம் உண்டாகிறதோ) என்ற வாக்கியத்தை ஸ்மரித்தார் ஞானம் பெற்ருர். சுவேதகேது குருவின் உபதேசத்தால் பிரும்மஞானம் பெற்ருர். இந்த மூவர்களின் விஷயத்திலும் வேதவாக்கியம் இன்றியே ஞானம் உண்டாயிற்று பிசாசகன் என்றவன் தன் வேலைக்காக காட்டுக்குப் போனபோது யாரோ சொன்ன தத்துவமஸி வார்த்தையை கேட்டு பூர்வஜன்ம ஸம்ஸ்காரத்தால் ஞானத்தைப்பெற்ருன் என்று கேள்விப்படுகிரேும். ஆகையால் இந்த உதாஹரணங்களினுல் வேதவாக்யமில்லாமல் ஞானம் உண்டாகும் என்று தெளிவாகிறதே.

—அது சரியல்ல. இப்படிக்கேட்டதால் உலகம் உண்மையல்ல என்ற தோற்றம் உண்டாகலாமே தவிற ஆத்மா ஞானனந்த ஸ்வரூபம் என்ற அறிவ எற்... ...

அதற்கு வேத வாக்கியம்தான் உதவும். மேலே சொல்லப்பட்ட உதாஹரணங்களில் வேத வாக்கியங்களே ஞாபகத்தின் வடிவாக இருந்து ஞானத்தை உண்டுபண்ணின

கேள்வி:—வேதவாக்கியங்களுக்கு வேறு பிரமாணங்கள் இல்லாமல் எப்படி ஒரு விஷயத்தை தீர்மானிக்கமுடியும்.

பதில்:—பிரத்யக்ஷம் அனுமானம் முதலியவை வேறு முகாந்திரங்களினுல் தீர்மானிக்கப்படவேண்டியவை இல்லை. இவைகளே விஷயத்தை தீர்மானிப்பவை அல்லவா?

சந்தேகம்: வேத வாக்கியங்கள் ஜீவாத்மா பரமாத்மா இரண்டும் ஒன்றுதான் என்கின்றன. ஆனுல் இந்த முடிவு நம்முடைய அனுபவத்திற்கு விரோதமாக இருக்கிறதே.

பதில்: இதில் விரோத பாவம் இல்லையே. ஜீவன் என்ற பதத்தால், சரீரம் என்ருவது இந்திரியங்கள் என்ருவது, சுகதுக்கத்துக்கு உட்பட்ட மனிதன் என்ருவது அர்த்தமில்லை. அப்படி நினைத்துக்கொள்வதால்தான் "தத்" என்ற பதத்துக்கு அர்த்தம் உணர்வதில்லை. ஆனுல் கடைசி நிலையானதும் பரமாத்மாவைச் சேர்ந்ததன்ரே.

வேதவாக்கியத்தை (தத்துவமஸி)க் கேட்டவுடனேயே நமக்கு ஆத்ம ஞானம் வராமலிருப்பதற்குக் காரணம் உலகத்திலுள்ள வஸ்துக்களில் நமக்குள்ள பற்றுதலும் வைராக்கியமின்மையும் விடுதலை பெறவேண்டும என்ற தீவிர எண்ணம் இல்லாமையுமேதான். விடுதலை பெற வேண்டும் என்ற எண்ணம் தீவிரமாக இல்லாவிடில், ஒரு குருவைத் தேடிப்போக எண்ணம் ஏற்படாது குரு இருந்தால் ஒழிய வேதவாக்கியத்தை நாம் கேட்க மாட்டோம. வேதவாக்கியத்தைக்கேட்டு அந்த பதங்களின் அர்த்தத்தை சாஸ்திர முறைப்படி பரிசீலனை செய்து அறிந்துகொள்ளாவிடில் பிரயோஜனம் ஏற்படாது. அக்ஞானமும் நீங்காது. அக்ஞானம் நீங்கினுல் ஒழிய வாழ்க்கையின் உத்தம லக்ஷியத்தை அடைய முடியாது, ஆகையால் 'தத்துவமஸி'

என்ற வாக்கியத்தின் அர்த்தத்தைத் தெரிந்துகொள்ள "தத்", "த்வம்" என்ற இரண்டு பதங்களின் சரியான அர்த்தத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம்.

நாம் சாதாரணமாக சரீரத்தை ஆத்மா என்று எண்ணுகிறோம். இது பெரிய தவறு. இந்திரியங்களுடன் கூடிய சரீரம் ஆஹாரத்தினுல் விருத்தியடைந்தது. உணவுப் பொருள்களால் வளர்க்கப்பட்டவைகள் எல்லாம் ஆத்ம வஸ்து ஆகாது. ஆஹாரம் சரீரத்துக்குள் புகுவதற்கு முன்பு ஆத்மாவாகாது. சரீரத்தை விட்டு மலமாக வெளியே போன பின்பும் அது ஆத்மாவாகாது. ஆகையால் இந்த உணவு சரீரத்தில் (அந்த ரூபமாக) இருக்கும்போது எப்படி ஆத்மாவாக முடியும்? இந்தத் தவருன எண்ணத்துக்கு அக்ஞானம்தான் காரணம்.

நம்முடைய சரீரம் ஆத்மாவல்ல என்று தெரிந்து கொள்ள முடியாவிட்டால் இறந்துபோன பின் இந்த சரீரத்தை நாயும் நரியும் தின்பதற்கு சண்டையிடும் போதாவது இந்த எண்ணம் தவறு என்று உணர வேண்டாமா அப்போது சரீரத்தில் பற்றுதல் ஏற்படாது.

நமது சரீரம் உணவினுல் விருத்தியடைந்தது என்பது நம்முடைய யூகம் அல்ல. வேதமே இதைச்சொல்லுகிறது. நாம் உட்கொள்ளும் உணவு ஒருபாகம் தாதுவாகவும் ஒரு அம்சம் மாம்சமாகவும் மற்ருெரு பாகம் மனதாகவும் மாறுகிறது என்பது அந்த வாக்கியம்.

நமது ஸ்தூல சரீரமும் சூக்ஷ்ம சரீரமும் ஆத்மாவல்ல என்று நாம் உணர்ந்தால் சரீரத்தில் உள்ள குறைவுகளினுல் நாம் பாதிக்கப்படமாட்டோம்.

"நானே பிரும்மம்" என்ற வேத வாக்கியத்தின் சரியான பொருள் நமக்கு விளங்காததற்குக் காரணம் நமக்கு சரீரம், இந்திரியங்கள், இவைகளிடம் உள்ள 'அஹம்' பாவம் (ஆத்மபாவம்) இந்த எண்ணம் மாறினுல் பற்றுதல்,

வேற்றுமை என்ற அபிப்ராயங்கள் போய்விடும். அப்போது நமக்கு நண்பன் விரோதி என்பவர்களே இருக்காது. எல்லோரும் பரமாத்ம ஸ்வரூபமாகத் தோன்றுவார்கள்.

மற்றொரு காரணத்தாலும் சரீரம் ஆத்மாவாக இருக்க முடியாது. ஏனெனில் இந்திரியங்களால் சரீரத்தை உணர்கிறோம். இதே ஆத்மாவாக இருந்தால் ஆத்மாவை ஆத்மாவினாலேயே அறியமுடியாது. மேலும் விழிப்பு நிலையில் தான் இந்த சரீரத்தின் தோற்றம் இருக்கிறது. ஸ்வப்ன சமயத்தில் வேறு தேகங்களுடன் சம்பந்தப்பட்டு விடுகிறோம். சிலகாலம் நம்மைவிட்டு விலகி இருக்கும் இந்த ஸ்தூல சரீரம் ஆத்மாவாக இருக்க முடியாது.

மேலும் இந்த சரீரம் ஒன்றுக்கொன்று விரோத அம்சங்கள் உள்ளது. நான் என்ற நிலையில் (உயிருடன் இருக்கும்போது) லேசாக இருக்கிறது. உயிர் போய் விட்டால் கனமாகி நான்கு பெயர்கள் சுமக்கவேண்டியிருக்கிறது. அதிகமாக இதை விளக்கவேண்டிய அவசியம் இல்லை. தெய்வத்தில் நம்பிக்கையில்லாத உலக வாழ்வு மனம் பொருந்தியவன் தான் அப்படி எண்ணுவான். சூக்ஷ்ம சரீரத்திலிருந்தும் ஆத்மாவைப் பிரித்து உணரவேண்டும்.

சந்தேகம்: இந்த ஸ்தூல தேகம் ஆத்மாவல்ல என்ற போதிலும், அஹங்காரம், சுறுசுறுப்பு ஆசைகள் இவைகளை ஆத்மா என்று சொல்லலாமல்லவா.

முடியாது. பருமன், இளைப்பு, முதலிய குணங்கள் ஆத்மாவுடையதல்ல. மற்ற வஸ்துக்களைப்போலவே இவை வந்து கொண்டும் போய்க்கொண்டும் இருக்கும் இவைகளை வெளிவஸ்துக்கள் என்று நாம் அறிகிறோம். எப்படி நெருப்பு உஷ்ணத்தை எரிக்காதோ அதுபோல் ஆத்மா தன்னைத்தானே அறிந்துகொள்வது என்பது

ஒரு வஸ்து தன்னைத்தானே பார்த்து ı கொள்ளமுடியாது. மீமாம்ஸகர்களின் கொள்கையின்படி (பாட்டரின் மதத்தின்படி) அறிந்துகொள்ளும் ஆத்மாவும் அறியப்படும் நான் என்ற ஆத்மாவும் ஒன்று என்பது இது சரியல்ல. எந்த இடத்திலும் அறிபவனும் அறியப்படும் பொருளும் ஒன்ருக இருக்கமுடியாது குடம் அறியப்படு ஆனல் அதுவே அறிபவனுமாக ஆகாது.

சந்தேகம் :—என்னை நான் அறிகிறேன் என்னும்போது அது நேரடியான ஞானமாகிறது. இதற்குக் காரணங்கள் அனுகூலமாக இருக்கின்றன என்பதால் இது மாறுபாடில்லை.

பதில் :—என்னை என்பது ஆத்மாவைக் குறிப்பதில்லை. அந்தக்கரணத்தைக் குறிக்கிறது. இது ஆத்மாவல்ல. ஆத்மாவானல் தன்னைத்தானே அறிவது என்பது பொருந்தாதே.

அப்படியானல், இந்த அறிவு எப்படி ஏற்படுகிறது என்று தெரியவேண்டும். பூரா ஆத்மாவால் ஏற்படுகிறதா அல்லது அதன் ஒரு பாகத்தினல் உண்டாகிறதா இரண்டும் அல்ல. ஆத்மாவைத் தெரிந்துகொண்டாலன்றி அந்தக் கரணத்தை என்ன என்று தெரிந்துகொள்ள முடியாது. ஆத்மாவுக்கு ஒரு காரியம் உண்டு என்று சொல்லி அது மற்ருென்றை அறிகிறது என்ருல் அதைத்தவிற வேருனதைத்தான் அறியமுடியும். ஆத்மாவுக்கு கார்யம் என்பதே இல்லை. அது ஸர்வவ்யாபி. ஆகவே 'தன்னைத் தான் அறிவது என்பது எந்த அம்சத்திலும் கிடையாது. ஆத்மாவுக்கு கர்மா என்பது இல்லாததால் அத்துடன் சம்பந்தப்பட்டதாகத் தோன்றும் அந்தக்கரணம் முதலியன வும் அறிவிற்குள்ளாகியது என்று சொல்ல முடியாது.

மேலும் ஆத்மா அறிபவன் என்று வைத்துக் கொள்வோம். அறிபவனை அறிந்தால் அந்த அறிவு ஏற்படும்போதுதான் அது உண்டாகும். அது அறியப்பட்ட

பின்னிட்டும் இருக்குமானால் அதை அறிபவன் என்று சொல்ல முடியாதே. ஆகையால் ஒன்றுக்கொன்று முரணான இந்த அம்சங்கள் ஆத்மாவுடையதாக ஆகாது.

சந்தேகம்: மேலே சொன்ன காரணங்களினால் அஹங்காரம், ஆசை, கார்யம் இவைகள் ஆத்மாவல்லவென்று சொன்னாலும் அஹம் பிரும்ம அஸ்மி என்ற வாக்யம் உலகில் பிரசித்தியாயுள்ளது. அப்பியாஸ தசையிலும் இதை உச்சரிக்கிறோம். ஆகையால் அஹம் என்ற பதத்தால் குறிக்கப்படுவது பிரும்மமல்லவா ?

பதில்: இல்லை, அப்படி ஒப்புக்கொண்டால் நான் வெளுப்பு நிறமுள்ளவன் என்றபோது வெளுப்பு என்ற வர்ண தர்மம் ஆத்மாவைச் சேர்ந்தது என்றல்லவா ஆகிவிடும்; வாஸ்தவமாக இதற்கு என்ன அர்த்தம் என்றால் எதை "அஹம்" என்று சொல்லிக்கொள்கிறோமோ அது பிரும்மமே தவிற அஹம் என்பது தனியே கிடையாது என்று பொருள். உதாஹரணமாக: "மரக்கட்டையே மனிதன்" என்ற வாக்கியத்தில் மனிதன் என்ற சொல்லுடன் சேர்ந்து மரக்கட்டையைக் கூறியிருப்பது 'இதுவரை எது கட்டையாகத் தோன்றியதோ அது கட்டையல்ல மனிதனே' என்றே பொருள் தரும். அதேபோல் பிரம்ம சப்தம் அஹங்காரத்தை பாதிக்கவே செய்கின்றது.

இப்படி அஹம் என்பதில் ஆத்மா என்ற எண்ணம் போவதினால் யாது பயன் எனில் கயிற்றில் பாம்பு என்ற எண்ணம் போய்விட்டால் எப்படி கயிறு மட்டும் இருக்குமோ அவ்விதம் அஹம் என்பதில் உள்ள ஆத்வ பாவம் போனால் ஆத்மாவே நிற்கும். இருட்டில்லாவிடில் பாம்பு என்ற தப்பு எண்ணம் நிலைக்காது அதுபோல் சித்தத்தில் உள்ள அக்ஞானம் போனால் ஆத்ம ஸ்வரூபம் விளங்கும்.

அந்தக்கரணம் ஆத்மாவாகில் சுஷுப்தியிலும் பின்னிட்டு முடிவிலும் இது சாசுவதமாக இருக்கவேண்டுமே

அப்படி இருப்பதில்லையே. ஆகையால் ஸ்தூலதேஹம் போலவே அந்தக்கரணமும் ஆத்மாவல்ல.

மேலும் ஞானம் என்பது ஆத்மாவைச் சேர்ந்தது. அது சாசுவதமானது. அந்தக்கரணமே ஆத்மா என்றால் அதுவும் சாசுவதமாகிவிடும் அப்படியானால் "நான்" "என்னுடையது" என்ற பந்தமும் சாசுவதமாக நின்று விடுமே. விடுதலை என்பதே ஏற்படாதே.

அஹம் என்ற தோற்றம் ஒரு காலத்தில் மாறிவிடும் என்றாலும் சில காலம் அது இருந்ததால், மாங்காய் பச்சை என்று சொல்லும்போது ஒரு காலத்தில் பச்சையாக இருந்து பின்பு அந்த வர்ணம் போனாலும் பெயர் மாறாமல் எப்படி இருக்குமோ அப்படி இருக்கட்டுமே.

இது ஒவ்வாது. மாறுதல் உள்ள வஸ்து ஆத்மாவாக இருக்கமுடியாதே. ஆத்மா எவ்வித மாறுதலும் அற்றது என்றல்லவோ வேதம் சொல்லுகிறது. முன்பு ஆத்மா நித்யமானது அந்தக்கரணம் நித்யமில்லை என்றோம். இப்போது அந்தக்கரணம் அநித்யம் அதுபோல் அநித்யத்வம் என்ற தர்மம் ஆத்மாவுக்குச் சொல்ல முடியாது என்று காட்டினோம். மேலும் அஹங்காரம் வருவதும் போவதுமாக இருக்கிறது. இந்தச் செயல் ஆத்மாவுக்கு இல்லை. ஆகையாலும் அஹங்காரம் ஆத்மா அல்ல.

ஆத்மாவுக்கும் மாறுதல் உண்டு என்று ஒப்புக்கொண்டால் என்ன கெடுதல் எனில், வேதத்தின்படி ஆத்மா நித்யமானது, எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியைப்போல் உள்ளது என்று அல்லவா சொல்லப்பட்டிருக்கிறது. தவிற அந்தக்கரணம் என்பது மற்ற வஸ்துக்களைப்போலவே அறியப்படக்கூடும் என்று சொல்லப்படுவதால், அது ஆத்மாவின் அம்சமாக ஆகாது. ஏனெனில் ஆத்மா ஒன்று சாசுவதமாக இருப்பதால்தான் எல்லா பிரமாணங்களுக்கும் அது ஆதாரமாக உள்ளது.

மேலும் அந்தக்கரணமும் ஆத்மாவும் ஒன்றுக்கொன்று முறணுன அம்சங்கள் உள்ளவை. அக்ஞான மூட்டத்துக்குட் பட்ட அந்தக்கரணம் அக்ஞானத்துக்கு விலக்கும் ஞானமய மானதுமான ஆத்மாவுக்கு சமானமாக ஆகாது. அக்னியும் குளிர்ச்சியும் சேர்ந்து இருக்குமோ ?

அறிபவனும் அறியப்படும் வஸ்துவும் ஒன்ருகாது. அறியப்படும் வஸ்துவே அறிபவனுகிவிட்டால் அறியப் படுவது என்பது ஏதுமில்லேயே. அப்போது அறிபவன் என்பவன் இல்லாமல் அறியப்படும் வஸ்துவே மீதமாகும். ஞான ரூபமான சாக்ஷி ரூபியான பிரும்மம் என்பது உலகுக்கு இல்லாமல் போய்விடும்.

மேலும் சுருதி இதற்கு பிரமாணம். ஆத்மா இதல்ல, ஆத்மா இதல்ல என்ற வாக்கியங்கள் பிரமாணம். பகவத் கீதையில் 13 வது அத்யாயத்தில் அந்தக்கரணம் என்பது பார்க்கப்படும் உலகம் என்ற கோஷ்டியில் சேர்க்கப்பட் டிருக்கிறது. ஆகையால் பகவானின் வாக்கிலும் இரட்டை நிலே என்பது ஆத்மாவுக்குச் சேர்ந்ததல்ல, என்பது தெளி வாகிறது. ஆத்மாவைத் தவிர உலகம் என்று தோன்றும் இரட்டை அம்சம் உண்மையல்ல, இதற்குக் காரணம் அக்ஞானமே என்று நாம் அறியவேண்டும்.

உலகம், ஆத்மா, இரண்டும் தனித்தனியாக இருக் கின்றன என்ற கொள்கை தவறு என்று சொன்ஞேம். அதை விவரிப்போம். ஆத்மாவை விட்டு உலகம் வேறு என்று சொல்ல முடியாது. ஆத்மா, நித்யமானது (ஸத்) அறிவு மயமானது (சித்) இதை விட்டு உலகு வேருனல் அதில் சாசுவதமாய் இருத்தல், அறிவு என்ற தன்மைகள் போய்விடும். அது அறியப்படுவதற்குரிய பொருளாகவும் ஆகமாட்டாது. உலகில் அறிவு மயம் என்ற குணமில்லாத தாலும் அது ஆத்மாவாக முடியாது. ஆகையால் உலகம் இருக்கிறது என்ற எண்ணம ஆத்மாவின்பேரில் சுமத்தப் பட்ட தோற்றமேயாம்.

ஒரு வஸ்துவுக்கு வர்ணம், சப்தம் முதலியவை உண்டு. இதை உணர்வதான, ஆத்மாவுக்கு இந்த குணங்கள் கிடையாது. அந்தக்கரணத்துக்கு இந்த இரண்டு குணங்களும் என்று எண்ணுவது பிரமையேயாம். சூரியனின் பிரதிபிம்பம் ஜலம் உள்ள பல பாத்திரங்களில் தனித்தனியாக இருப்பதுபோல் காண்கிறமாதிரி சுத்த ஞானமயமான ஆத்மா ஒன்றே பல ஜீவர்களிடம் தனித்தனியாக தோற்றமளிக்கிறது என்று அறியவேண்டும். ஆகாயத்தில் தோன்றும் ஒரே பெரிய சூரியன் ஜலமுள்ள பாத்திரங்களில் சிறிது பெரிது என்ற பேதங்களுடன் எப்படித் தோற்றமளிக்கின்றதோ அப்படியே ஒரே ஆத்ம சைதன்யம் பல ஜீவர்களிடம் அந்தந்த ஜீவனுக்குள்ள குறைபாடுகளுடன் தோற்றமளிக்கிறது.

சந்தேகம்: ஒரே ஆத்மா எல்லா இடங்களிலும் இருக்கிறது என்றால் பரஸ்பர விரோதமான சுக துக்க அனுபவங்கள் ஜீவர்களிடம் தோன்றும்போது அந்த பேதங்கள் ஆத்மாவை பாதிக்காதா?

அந்த வித்யாஸங்கள் வாஸ்தவமாக, ஆத்மாவுக்கு சம்பந்தப்பட்டவை அல்ல. சம்பந்தப்பட்டதுபோல் காணப்படுகின்றன. உதாஹரணமாக ஒரே பெண் காமுகனுக்கு அழகியவளாயும் ஸன்யாஸிக்கு அசுத்தம் நிறைந்தவளாயும் நாய்க்கு இனிப்பான உணவாகவும் தோன்றுகிறாள். இதுபோலவேதான்.

கேள்வி: ஒன்றுக்கொன்று விருத்தமான குணங்கள் ஒரே இடத்தில் காணப்படும்போது அதில் சேர்க்கை (ஒற்றை) இல்லை என எப்படிச் சொல்லமுடியும் என்று கேள்வி.

அக்ஞானத்தால் உலகத்தை இருப்பதுபோல் எண்ணுகிறான். இதனால் ஆத்மாவுக்கு பாதகம் ஏற்படாது. ஆகாயம் நீலவர்ணமுள்ளது என்று நாம் எண்ணுவதால்

நீலத்தன்மை ஆகாயத்தில் ஒட்டிக்கொள்ளுமா. ஒரு வஸ்துவைத் தான் இருப்பதாக மனதில் கற்பித்துக்கொண்டால் அது வாஸ்தவத்தில் இருப்பதாகுமோ? ஒரு பிச்சை எடுப்பவன் தன் பிக்ஷை பாத்திரத்தில் ஸத்துமாவை எடுத்துக்கொண்டு காட்டில் மரத்தடியில் உட்கார்ந்துகொண்டு மனதில் சிந்திக்கலானான். இந்த மாவைக் கொடுத்து பசுமாடு வாங்குவேன், அது கன்றுகள் போடும் பெரிய கோசாலை ஏற்படும், பின் பூமி வாங்குவேன். பணம், தானியம் இவைகளை சம்பாதிப்பேன், பணக்காரன் தன் பெண்ணை எனக்கு கல்யாணம் செய்து கொடுப்பான். அவளுக்கு ஒரு குழந்தை பிறக்கும். அவன் தன் தாயிடம் வேண்டிய ஒரு வஸ்துவைக் கொடு என்று அழுது தாயிடம் கேட்பான். தாய் அதை லக்ஷியம் செய்யாமல் தன் காரியத்தில் ஈடுபட்டிருப்பாள். நான் கோபித்துக்கொண்டு இப்படி அடிப்பேன் என்று தன் கையை வீசினான். கையில் இருந்த பிக்ஷா பாத்திரம் கீழே விழுந்து உடைந்தது. மாவும் காற்றில் அடிக்கப்பட்டு போய்விட்டது. அவன் அழுதான். இவனுடைய கற்பனையால் ஏதாவது வஸ்து உண்டாயிற்றோ. அதுபோலவே தான்.

இதேபோல் அறிவின்மையினால் உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் பிரமிக்கிறோம். ஒரு ஸ்திரீயை அழகான புருவம், அழகான மூக்கு, அழகான முகம் கவர்ச்சியுள்ள புன்சிரிப்பு இவைகளையுடையவள் என்று எண்ணிக் கொண்டு மோகத்தால் சரீரத்திலிருக்கும் அசுத்தத்தை உணராமல் புருஷன் ஆலிங்கனம் செய்துகொள்வதில்லையா அதுபோல்தான் தன்னை ஏமாற்றிக்கொண்டு கற்பனைகள் செய்துகொள்கிறான்.

பார்வையின் மூலமும் சப்தங்களினாலும் இழுக்கப்பட்டு ஸம்பந்தம்பெற்ற அந்தக்கரணம் தன்னிடத்தில் பிரதிபிம்பிக்கப்படும் சைதன்ய விசேஷத்தால் தோற்றம் ஏற்படுவதால் பார்ப்பவன் என்ற நிலையைப் பெறுகிறது. ஆத்ம

சைதன்யம் செயலற்றது. அந்தக்கரணத்தின் காரணமாகப் பார்க்கப்படும் வஸ்துவுக்கும் (உலகத்துக்கும்) ஆத்மாவுக்கும் அறியப்படுகிறது என்ற சம்பந்தம் ஏற்படுகிறது. வஸ்துவிடத்தில் தோன்றும் சைதன்யம் அந்தக்கரணத்தின் மூலம் சம்பந்தப்படுவதால் நான் இதை அறிகிறேன், பார்க்கிறேன் என்ற எண்ணம் ஏற்படுகிறது. இவ்வாறு அஹங்காரத்தின் மூலமே திருச்யம், திரஷ்டா இரண்டிற்கும் சம்பந்தம் உண்டாகிறது. இந்த அஹங்காரம் நீங்கினுல் அந்த நிலையும் நீங்கி அத்வைத நிலை ஏற்படும்.

கேள்வி: தத்த்வமஸி என்ற வாக்கியத்தில் உள்ள 'த்வம்' என்ற பதத்துக்கு விளக்கம் கூறுகையில் அஹங்காரம் ஆத்மாவாக முடியாது என்று நிரூபிக்கப்பட்டது. அது சரியல்ல என்று தோன்றுகிறது. ஏனெனில், "அஹம் பிரும்மாஸ்மி" (நானே பிரும்மமாக இருக்கிறேன்) என்ற வாக்கியத்தில் "அஹம்" "பிரும்மம்" என்ற இருபதங்களுக்கும் அர்த்த சக்தி சமமானது. அதில் வேற்றுமை இருக்கமுடியாது.

பதில்: அப்படித் தோன்றினுலும் அதை விசாரணை செய்து பார்த்தால் அந்தக்கரணம் ஆத்மாவல்ல என்று ஏற்படும். ஸுஷுப்தியில் (ஸ்வப்னமில்லாத தூக்கம்) அந்தக்கரணத்தின் வேலை இல்லை. ஆனுலும் "எனக்குத் தெரியாதே" என்று சொல்லும்போது "தெரியாது" என்ற க்ரியா பதத்துக்கு அந்தக்கரணம் கர்த்தாவாக ஆகாமல் ஆத்மாவே கர்த்தாவாக ஏற்படுவதுபோல் தோன்றும். இரும்புத்துண்டு அக்னியில் காய்ச்சப்பட்ட பின் சூடுடன் கூடியதாகி நம்மைச்சுட்டால் "இரும்பு சுடுகிறது" என்கிறோமே. அப்போது இரும்பு ஸ்வபாவமாக குளிர்ந்தது. அக்னியின் சேர்க்கையினுல் உஷ்ணம் அதில் உண்டாயிற்று. அக்னி நீங்கின பின்பும் அதனுல் உண்டுபண்ணப்பட்ட உஷ்ண சக்தி இரும்புத்துண்டை விடவில்லை. அது வேலை செய்கிறது. ஆனுல் உண்மையில் இரும்பு சுட்டதா

இல்லையே. அதுபோல் ஆத்ம சைதன்யத்திற்கு பாஸன ஸ்தானமாக இருந்த அந்தக்கரணம் அந்த பாஸனம் இல்லாத ஸமயத்திலும் இரும்பில் உள்ள உஷ்ணம்போல் தன்னிடத்தில் இருந்துகொண்டு ஆத்ம சைதன்யத்துடன் விளங்கும்போது செய்த காரியத்தை இப்போதும் செய்கிறது.

மற்றொரு வழியிலும் இதைச் சொல்லலாம். இந்திரியங்களைப்போலல்லாமல் அந்தக்கரணம் உள்ளே ஸூக்ஷ்மமாகத் தனியாக இருந்துகொண்டு ஆத்மாவின் சித்ப்ரகாசத்தால் வேலை செய்துகொண்டே வருவதால் அந்த நீண்ட சம்பந்தத்தால் அந்த ஆத்மாவுக்குள்ள குணங்களும் இதற்கு ஏற்பட்டதுபோல் தோற்றமேற்படுகிறது.

மேலும் ஆத்மா இல்லாமல் அந்தக்கரணம் தனியாக இருக்கமுடியாது. ஆத்மாவின் சித் (ஒளி) அந்தக்கரணத்தில் பட்டால்தான் அதற்கு வேலை செய்யும் சக்தி வரும். ஆகையால் வேத வாக்யத்தில் அஹம் என்ற பதத்தால் அந்தக்கரணத்தில் இருக்கும் ஆத்மாவின் சைதன்யம் என்று அர்த்தம் செய்யவேணும்.

அந்த லக்ஷ்யவஸ்து (அறியப்படவேண்டிய ஆத்மா) எது ?

சாந்தோக்ய உபநிஷத்தில் (7-வது அத்யாயம்) பூமவித்யா பிரகரணத்தில் சொன்ன மாதிரி எங்கு வேறொன்றும் காணப்படுவதில்லையோ, கேட்கப்படுவதில்லையோ, அறியப்படுவதில்லையோ, ஆத்மாவைத்தவிற வேறொன்றும் இல்லையோ, அது பூமா எனப்படுகிறது. நாமரூபங்கள் இல்லை க்ரியையும் இல்லை. வேறு பிரமாணங்களால் தீர்மானிக்கப்பட்டதல்ல தானே ஸ்வதஸ் ஸித்தமாகவே தோன்றுகிறது.

இதுவரை சொன்னதால் அக்ஞானத்தினால் ஏற்பட்ட ஆத்மாவே கர்த்தா என்ற எண்ணம் விலக்கப்பட்டது சுகம் என்பது அந்தக்கரணத்தின் சம்பந்தமானது என்றும்

ஆத்மாவுக்கு இதனால் ஏதும் லாபமில்லை என்றும் சொன்னோம். இனி ஆத்மா ஸாக்ஷிரூபியாக இருந்து, நேரில் அறிவது என்ற க்ரியை இல்லாமலேயே, எல்லா வற்றின் தோற்றமும் அங்கு உள்ளது என்பதை விளக்குவோம். ஆத்மா சுத்த சைதன்யம், மாறுதல் இல்லாதது, அனாதி காலமாக வந்த அவித்யையின் காரண மாய், பார்ப்பது போல் தோன்றுகிறது. ஆனால் ஆத்மா பார்ப்பது என்பது மாறுதல் ஏற்படும் என்ற அர்த்தத்தில் கிடையாது. எல்லா அந்தக்கரணத்தில் ஏற்படும் தோற்றங்கள் ஆத்மாவில் பிரதிபாஸிக்கிறது. தான் மாறுதலற்ற நித்ய வஸ்து. மாறுதல் உள்ள அநித்ய விஷயங்கள் இதில் தோற்றத்தை அளிக்கின்றன. சூரியன் தன் தேஜஸ்ஸினால் எப்படி பிரகாசப்படுத்துகிறானோ அதுபோலவேயாம்.

கேள்வி: எல்லா கக்ஷியினர்களும் தங்கள் தங்கள் வாதங்களையே சரி என்றும் எதிரியின் வாதம் தவறு என்றும் சொல்கிறார்கள். எல்லாரும் ஒப்புக்கொள்ளும் வாதங்கள் ஏதும் இல்லை அப்படி இப்போது சொன்ன தீர்மானத்தை எப்படி ஒப்புக்கொள்கிறது.

பதில்: எல்லா கக்ஷியினர்களிடமும் அனுபவம் என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறதல்லவா. நாம் சொல்லும் ஆத்மாவை அவர்கள் ஒப்புக்கொள்ளவேண்டாம். பற்பல காரணங் களைச் சொல்லிக்கொண்டு மோகம் அடைகிறார்களே தவிர அனுபவத்தால் ஆத்மா உள்ளது என்பதை ஒப்புக் கொள்கிறார்களல்லவா.

சந்தேகம்: அனுபவத்தால் ஆத்மா உண்டு என்பதை ஒப்புக்கொண்டாலும் நமது சந்தேகம் நீங்குவதில்லை. நமது சரீரத்தின் தோல்போல் வெயிலுக்கும் மழைக்கும் உட் பட்டது என்று சொல்லவேண்டும். அல்லது ஆகாயத் தைப் போல் இவைகளுக்குட்பட்டதல்ல என்று சொல்ல வேணும், அதாவது ஆத்மாவுக்கு மாறுதல் ஏற்படுகிறது.

அல்லது இல்லையென்று ஒரு வழியில் நிற்கவேண்டும். மாறுதல் உண்டானால் நாசத்தையுடையதாகும். மாறுத லற்றதானால் அதுவும் அஸத்தாகிவிடுமன்றோ. மேலும் நம்முடைய அந்தக்கரணத்தால் ஆத்மாவில் வித்யாஸம் ஏற்படும் என்று சொன்னால், ஆத்மா சாசுவதம், மாறுத லற்றது என்று ஒப்புக்கொள்ளமுடியாது. அது மாறுதலுக் குட்பட்டதல்ல என்றாலோ, அனுபவத்துக் குட்பட்டது என்பது பொருந்தாது.

: இதை ஒரு உதாரணத்தால் நிவர்த்திப்போம். புகை ஆகாயத்தில் கிளம்பி மேலே போகிறதைப் பார்க் கிறோம். ஆகாயத்தைப் பிளந்துகொண்டு போகிறதா? ஆகாயம் பிளக்கமுடியாது என்று சொன்னால் புகை மேலே போகாமல் ஓரே இடத்தில் தானே நிற்கும். ஆகாயம் உடைக்கப்படுவது எனில் அப்படிக் காணப்படுவதில்லையே. இதை எப்படித் தீர்மானிக்கிறோம் என்றால் ஆகாயத்துக்கு தான் பாதிக்கப்படாமல் இதர வஸ்துக்களின் புகுதலுக்கு இடம் கொடுக்கும் தன்மை உள்ளது, இதேபோல ஆத்மா வுக்கு தன்னை பாதித்துக்கொள்ளாமலேயே இதர விஷயங் களின் தோற்றத்தை ஏற்றுக்கொள்ளும் சக்தி உள்ளது என்று அறிந்துகொள்ளவேணும்.

மேலும் அந்தக்கரணத்தின் வேலையாகிய சுகதுக்க அனுபவத்தை ஆத்மாவினுடையது என்று நாம் எண்ணு வதற்குக் காரணம் யாதெனில், ஒருவன் படகில் போய்க் கொண்டிருக்கும்போது தான் ஒரே நிலையில் இருப்பது போலும் கரையின் மேலுள்ள மரங்கள் நகர்ந்துபோவது போலவும் பிரமம் ஏற்படுவது போலவேயாம். ஒரு ஸ்படிகக் கல் தன்னுடைய பிரகாசத்தினால் பக்கத்தில் உள்ள வஸ்துக் களை பிரகாசிக்கும்படி செய்கிறது. வஸ்துக்களே இல்லாத இடத்தில் இருந்தாலும் இந்த ஸ்படிகத்தின் ஒளி குறைவ தில்லை அதுபோலவேயாம். மேலும் ஸ்படிகக்கல் பக்கத்தில் ...க்கும் வஸ்துவை பிரகாசிக்கும்படி செய்யும்போது தன்

வஸ்து பக்கத்தில் இல்லாத சமயத்திலும் பக்கத்தில் இருக்கும் சமயத்திலும் ஸ்படிகக்கல்லுக்குள்ள ஒளி மாறுதலை அடைவதில்லை. அதேபோல் அந்தக்கரணத்தை ஆத்மா தன் (சித்) சக்தியால் பிரகாசப்படுத்தும்போதும் மற்ற காலத்திலும் ஆத்மா எவ்வித மாறுதலையும் அடைவதில்லை.

இதில் ஒன்று தெரிந்து கொள்ளவேண்டும். பிரகாசப் படுத்துகிறது என்று சொல்லும்போது இது ஆத்மாவின் செயல் என்று சொல்லிவிடக்கூடாது. அந்த வார்த்தையால் அந்தக்கரணத்தில் பிரகாசம் ஏற்படும்போது ஆத்மா பக்கத்தில் இருக்கிறது என்று மட்டும் உணரவேண்டும்.

இப்படிச் சொல்வதால் ஸாங்கிய சாஸ்திரக்காரர்களின் கொள்கையை நாம் ஒப்புக்கொள்கிறோம் என்று எண்ணி விடக்கூடாது. அவர்கள் மதத்தில் ஆத்மா மற்ற அந்தக் கரணத்தை பிரகாசிக்கச் செய்கிறது தான் க்ரியா சம்பந்த மற்றது என்பதுடன் சிருஷ்டிக்குக் காரணமாக வேறொன்று சத்யமான வஸ்து உண்டு என்கிறார்கள் ஆகவே சிருஷ்டி பொய் என்பதை அவர்கள் ஒப்புக்கொள்வதில்லை, அத்துவைதத்தில் உலகம் மித்யை (பொய்) என்று சொல்லு கிறோம் ஆகாயத்தில் மேகம் தோன்றி மறைவதுபோல் ஆத்மாவிடம் உலகம் தோன்றி மறைகிறது.

உலகம் என்ற இரட்டை எண்ணத்தால் ஆத்மா பாதிக்கப்படுவதில்லை. அது சாசுவதமாய் சாக்ஷிபோல் பார்த்துக்கொண்டே இருக்கிறது மாறுதல் தோன்றும் உலகத்தைப்பார்ப்பதால் அந்தக்கரணத்தில் ஏற்படும் பிரகாசத்துக்கு ஆத்மாவின் ஒளி காரணமாகிறது. அந்தக்கரணம் ஒவ்வொரு க்ரியையிலும் மாறுதல்களை அடைகிறது (அறிகிறது) முன் நடந்ததையோ பின் நடக்கப் போவதையோ அந்தக்கரணம் உணராது ஒவ்வொன்றாகவே தான் விஷயங்களை உணரும் ஆத்மாவுக்கு த்ரிகாலத்தை உணரும் சக்தி உண்டு.

அந்தக்கரணம் பார்க்கிறது கேட்கிறது. ஆத்மா பார்ப்பதும் இல்லை கேட்பதும் இல்லை பார்ப்பதும் கேட்பதுமாயுள்ள அந்தக்கரணத்துக்கு அந்த சக்தியை உண்டு பண்ணும் ஒளி ஆத்மாவிடமிருந்து வருகிறது இதுபோலவே அந்தக்கரணத்தின் எல்லா வேலைகளும் ஆத்மாவுடன் அது சேர்ந்து இருக்கும்போது ஏற்படும் ஒளியால் (சித்) ஏற்படுவதேயாம். ஆத்மா இந்த க்ரியையில் சிக்கிக்கொள்வதில்லை.

அந்தக்கரணம் வஸ்துவை சம்பந்தப்பட்ட விருத்தியினுல் பல வடிவங்களை உடையது போல் தெரிகிறது. ஆத்மாவுக்கு இது கிடையாது. ஆத்ம ஒளியில் எவ்வித மாறுதலும் இல்லை. அந்தக்கரணம் காலவரைக்குட்பட்டது ஆத்மா காலவரைக்குட்பட்டதல்ல. அந்தக்கரணம் மற்றொன்றை ஆசிரயித்தது ஆத்மாவுக்கு ஆசிரயமே இல்லை. அந்தக்கரணத்துக்கு பார்வை வெளியில். ஆத்மா உட்பார்வையுடையது அந்தக்கரணம் முடிவுடையது ஆத்மா முடிவற்றது எல்லா தேகங்களிலும் உள்ள அந்தக்கரணம் ஆத்மாவால் பிரகாசிக்கப்படுகிறது. ஆத்மா நித்ய ஸ்வயம் ஜோதியானது.

ஆத்மாவுக்கு துக்கம் உண்டு என்றுல் அந்த துக்கத்தை அறிபவர் யார்?. கஷ்டமும் அதை அறியும் பேர் வழியும் ஒன்றுக முடியாதே. மேலும் எவ்விதமாறுதலையும் பெறுமல் கஷ்டப்படுவதை உணரமுடியாது மாறுதலை அடையும் வஸ்துவே மாறுதலை அடைபவனுக ஆகமுடியாது அறிபவனுக்கு மாறுதல் ஏற்படக்கூடாது. அவனும் மாறுதலை அடைந்தால் அதை அறிபவன் என்பவன் யார்? ஆகவே பல மாறுதல்களுக்கு சூக்ஷ்மமாக சாக்ஷியாக இருந்து கொண்டிருக்கும் ஆத்மாவுக்கு எவ்வித மாறுதலும் இல்லை இந்த அறிவு யுக்தியினுல் ஏற்பட்டிருந்தாலும் பிரமாணங்களினுல் ஏற்பட்டிருந்தாலும் ஆத்மா எங்கும் வியாபகமுள்ளதே. எது இருந்தாலும் இல்லாவிட்டாலும்

ஆத்மா இடைவிடாமல் இருக்கிறது ஆத்மாவைத் தவிற உள்ள மற்றவை தான் சாசுவத மற்றவை ஒரு குடத்தை உண்டு பண்ணுவதால் அது ஒரு இடத்தை ஆக்ரமிக்கலாம் அது உடைந்து போவதால் அந்த இடம் காலியாகலாம் ஆனல் அதினுல் ஆகாசத்துக்கு (இடைவெளிக்கு) எவ்வித பாதகமும் இல்லே. இதேபோல் அந்தக்கரணத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டபோதிலும் அதனுல் ஆத்மாவுக்கு மாறுதல் கிடையாது.

இந்தத் தீர்மானம் அனுபவத்திலேயும் அறியலாம். தடியை வைத்துக்கொண்டிருப்பவனை தடியில்லாத ஒருவன் பார்க்கும்போது பார்ப்பவனுக்கு எவ்வித மாறுதலும் எப்படி ஏற்படுவதில்லேயோ அதேபோல சுகதுக்கத்துக்கு இடமாகிய அந்தக்கரணத்தின் அனுபவத்தால் சாக்ஷியான ஆத்மா பாதிக்கப்படுவதில்லே. சாக்ஷியாக பார்ப்பவனுக்கு எவ்வித மாறுதலும் ஏற்படுவதில்லே.

அந்தக்கரணத்துக்கு மாறுதல் உண்டு என்பதில் சந்தேகமில்லே. ஒவ்வொரு வஸ்துவையும் வரிசையாக உணர்கிறது. குடத்தை அறியும்போது வஸ்திரத்தை அறிவதில்லே. அதாவது அந்தக்கரணம் அறியும்போது பற்பல நிலேகளேக் கடந்து செல்கிறது என்று அர்த்தம் செய்து கொள்ளவேணடும். இதுவே மாறுதலாகும். இதற்கு ஆத்மாவே ஸாக்ஷியாகும். மாறுதல் அற்றதும், தொடர்ந்து இருப்பதும் அந்தக்கரணத்துக்கு மேலானதுமான ஒரு பேரறிவு (சித்) உடைய ஆத்மா இல்லாவிடில் அந்தக்கரணத்தில் ஏற்படும் தோற்றம் மறைவுபோன்ற நிலேகளே உணரவும் முடியாது. மாறுதல்களே மாறுதல்களுக்குட்பட்ட அந்தக்கரணத்தால் அறியமுடியாது. இடைவிடாமல் சாக்ஷியாக பார்த்துக்கொண்டிருக்கும் ஆத்மா அந்தக்கரணத்தின் எல்லா நிலேகளிலும் இருந்துகொண்டிருக்கிறது.

ஒரு முளை ஆகாயத்தால் வியாபிக்கப்பட்டே முளைத்தல் வளர்தல் முதலிய மாறுபாடுகளை அடைகிறது அதே போல் ஆத்மாவினுல் வியாபிக்கப்பட்டே அந்தக்கரணத்து விழிப்பு ஸ்வப்னம் ஸுஷுப்தி என்ற மாறும் நிலைகள் உண்டாகின்றன. இந்த எந்த நிலையிலும் ஆத்மா இல்லாமல் இல்லை. அந்தக்கரணத்தின் ஒரு காரியத்துக்கும் மற்றொரு காரியத்துக்கும் வித்தியாசத்தை நாம் பார்க்கலாம். ஆனுல் இந்தக் காரியங்கள் எல்லாவற்றையும் அறியும் நிலை ஒன்றே யாம். இதனுல் மாறுதல் இல்லாத ஆத்மா ஸ்வயமாகவே பிரகாசிக்கிறது என்று தீர்மானம்.

ஆத்மாவுக்கு மாறுதல் ஏற்படுவது போல தோன்றினுலும் இது வாஸ்தவமல்ல நேரான ஒரு குச்சியை தண்ணீரில் நட்டால் அது கோணலாக இருப்பதுபோல காணப் படுகிறது. இது வாஸ்தவமல்லவே அதுபோலவேதான் ஆத்மா ஆறுவிதமாகிய எவ்விதமாறுதலும் அடையாது என்று சொல்லிவிட்டால் எந்தக்காரணத்தைக்கொண்டும் அதற்கு கெடுதலோ குறைவோ ஏற்படும் என்று சொல்ல முடியாது. அந்தக்கரணத்தின் வெவ்வேறு தோற்றத்துக்கு வெவ்வேறு வஸ்துக்கள் காரணமாகின்றன. ஆனுல் அவைகளை அறிவதில் எவ்வித வித்யாஸமும் கிடையாது அந்தக் கரணம் அவ்வப்போது அந்தந்த வஸ்துக்களை மாத்திரமே அறியும் எல்லா வஸதுக்களையும் அறிவதில்லை. இதுவே ஆத்ம ஸ்வரூபமாகில் எல்லா வஸ்துக்களையும் அறிய வேண்டாமா. இது மாறுதல் அடையாமல் இருந்தால் ஆத்மாபோலவே எல்லாவற்றையும் அறியும். அந்தக் கரணத்துக்கு இந்த சக்தி இல்லாததால் அது மாறுதலுக்கு உட்பட்டது என்று தீர்மானிக்கிறேம்.

அறிவது என்பது எப்போதும் ஒன்று. சண்டாளனுஞு லும் சரி, பிரும்ம சிரேஷ்டனுனுலும் சரி யாருடைய அந்தக் கரணத்திலும் அறியும் தன்மை ஒன்றே. பார்ப்பவர்கள் பலரே. இவர்களுள் ஜ்யோதிஸ் ஒன்றுதான்,

அந்தந்த வஸ்துக்களில் (பார்ப்பவர்களில்) அந்த அறிவு தனித்தனியாக இருப்பதுபோல் காணப்படுகிறது. பல அந்தக்கரணங்களின் மாறுதல்களைப் பார்க்கும் ஸாக்ஷிரூபி யான ஆத்மாவுக்கு இடம் பொருள் காலம் என்ற வித்யாஸமே கிடையாது. இது ஒரே நிலையில் இருந்து எல்லாவற்றையும் பார்க்

:—ஒருவனுடைய அந்தக்கரணத்தில் பிரும்ம ஸ்வரூபம (ஞானியின் நிலை) பிரகாசிக்கிறது. மற்றவ னுடைய அந்தக்கரணத்தில் துக்கநிலை தோன்றுகிறது. ஆகையால் ஒருவனுக்கு ஆத்மஞானம் வந்தபின்னும் மற்றவனுடைய துக்கம் இவனை பாதிக்குமே.

):—அப்படியில்லை. ஆத்மஞானம் வராமலிருக்கும் நிலையிலும் மற்றவனுடைய துக்கம் இவனை பாதிப்பதில்லை. ஆகவே ஞானம் ஏற்பட்ட பின்பு இவனுடைய பூர்வதுக்கமே நாசமடைந்துபோகிறபொழுது மற்றவர்களின் துக்கம் இவனை அடைகிறது என்பது ஸம்பவிக்காது. இது வீண் வாதத்தினால் தீர்மானிப்பதில்லை, வேத வாக்கியங்களும் இந்த அபிப்ராயத்துக்கு ஆதாரமாக இருக்கின்றன.

இவ்விதம் பல காரணங்களினால் பல வழிகளில் ஆத்மாவின் நிலை நிரூபிக்கப்பட்ட பின்பும் சிலருக்கு சந்தேகம் வருமேயானால் யானையைக்கண்ட குருடர்களின் கதை போலவேதானாகும்.

ஒரு குடத்திற்குள் உள்ள ஆகாயம் என்று பேசும்போது குடத்தினால் வரையறுக்கப்பட்ட ஆகாசத்தின் ஓர் அம்சத்தைக்குறிக்கிறோம், அது ஆகாசத்தின் பிரதான அம்சம் ஆகாது. அதுபோல வஸ்துக்களை அறியும்போதும் அந்த வஸ்துவின் அளவுக்குட்பட்டதைக் காண்கிறோமே தவிற மற்ற வஸ்துக்களின் நிலையையும் சேர்ந்து உணர்வ தில்லை.

ஆத்மாவும் மேலே சொல்லப்பட்ட ஞானபிரகாசமும் இதர உலகத்தினுல் பாதிக்கப்படாமல் சாசுவதமாக ஒரே ரூபமாக இருக்கிறது. உலகமும் அந்தக்கரணமும் மற்ற பொருள்களைப்போலவே தோன்றி மறையும். ஆகையால் ஆத்மாவுக்கு அந்நியமானது. எப்படி மனிதனின் தலையில் ரோமங்கள் தனியாக வெளியில் தோன்றுகின்றனவோ அப்படியே.

இந்தக் காரணங்கள் எல்லாம் ஆத்மாவிலிருந்து அனுத்மாவைப் பிரித்துக் காட்டுவதற்கே தவிற ஸ்வயம் ஜோதியான ஆத்மாவை விளக்குவதற்கல்ல. பல முகாந் திரங்களினுல் அந்தக்கரணமும் ஆத்மாவல்ல என்று தெரிந்து கொள்ள வேணுமே தவிற ஆத்மா ஒன்று என்பது முகாந் திரங்களினுல் ரூபிப்பதில்லே. அது ஸ்வதஸ்ஸித்தமானது அதனுலேயே தோன்றுகிறது. இதற்குக் காரணங்கள் இல்லே.

ஃவ இந்த சிருஷ்டியில் உள்ளவை எல்லாம் அறிபவன், அறியப்படும் பொருள், அறியும் காரியம், அறியும் கருவி, அதன் முடிவுகள் எல்லாம் ஆத்மாவல்ல என்று பார்த்தோம். இது ஸாங்க்ய மதத்தினர் சொல்வதுபோல ஆத்மாவல்லாத பிரகிருதியின் ஆதாரத்தில் உள்ளதல்ல. நம்முடைய கொள்கையில் உலகமென்பது அநாதியான அஞானத்தின் காரணத்தால் ஆத்மாவின் பேரில் சுமத்தப் பட்டது. இது பொய்த்தோற்றம் இது ஆத்மாவின் பிரகாசத் தால் விளங்குகிறது என்கிருேம்.

மேலே சொன்ன ஞானமில்லாமல் உலகில் பொருள்கள் இல்லே. பொருள்கள் இல்லாமல் ஞானம் உண்டு உலகில் தோற்றமுள்ள வஸ்துக்கள் எல்லாவற்றிலும் ஆத்மாவே ஊடுருவி நிற்கிறது. வஸ்துவைத்தவிற அறிபவன் வேறு பட்டதுபோல் உலகத்தைத்தவிற ஆத்மா வேறுபட்டது.

நம்முடைய புத்தியினுல் ஏற்படும் அறிவும் அறியப்படும் வஸ்துக்களும் அக்ஞானத்துக்குட்பட்டவை அதற்கு

மீறியவையல்ல. அக்ஞானத்தினுல் உண்டாகியது நம் புத்தியின் அறிவு. பலன் அதை உண்டாக்கிய காரணத்துக்கு மீறிப்போகாது, அறியப்படும் வஸ்து ஒன்று இருக்குமாகில் அது வெளிவஸ்துவாகத்தானிருக்கவேணும். உலகில் உள்ள குடம் முதலியவை உணரப்படுவதில் இடம், காலம், புத்தி இவைகள் தேவையாக இருப்பதால் சரீரத்துக்கு வெளியானது தேகமோ யெனில், இந்திரியங்கள், புத்தி இவைகளால் உணரப்படுவதால் அந்தக்கரணத்துக்கு வெளியானது. அந்தக்கரணமும் அதற்கு ஒளியைக் கொடுக்கும் ஆத்மாவுக்கு வெளியானது. ஆத்மா தனக்கே வெளியானதாக ஆகாது ஆகையால் வேருென்றினுல் அறியப்படுவது என்பது ஆத்மாவின் தன்மையாகாது.

ஜடவஸ்துக்களுக்குத் தன்னைத்தானே அறிந்து கொள்ளும் சக்தி இல்லை. மோகத்துக்குட்பட்டமையால் வேறு பிரமாணங்கள் தேவையாகின்றன. அப்போதுதான் வஸ்துஞானம் உண்டாகிறது. ஆத்மா அவ்விதமல்ல. அது ஸ்வயம்பிரகாசமானது. அதைக்காண்பதற்கு வேறு பிரமாணம் தேவை இல்லை.

சந்தேகம் : ஆத்மாவை காட்டுவதற்கு உபநிஷத்துக்கள் உபயோகமாகின்றனவே !

பதில் : ஸ்வயம் ஞானமான ஆத்மாவை அறிய அக்ஞான நிவ்ருத்திதான் தேவையே தவிற வேறு காரணம் தேவை இல்லை.

ஆத்மா அனுத்மா இவைகள் ஒன்றுக்கொன்று வேறு பட்ட குணங்களை உடையது என்று சொல்லப்பட்டதால் இவைகள் சேர்ந்து காணப்படும்போதும் அது பொய்த் தோற்றமேதான். அறிவு, அறிவுக்குட்பட்ட வஸ்து, அறியும் காரியம் இவை வெவ்வேருனவை. அதேபோல் ஆத்மா, அதன் அறிவுக்குட்பட்ட அந்தக்கரணம், அதை உணரும்

காரியம். இவை ஒவ்வொன்றும் வெவ்வேருனவை அந்தக் கரணம் எப்படி மற்ற பார்க்கப்பட்ட அறியப்பட்ட பொருள் களைக்காட்டிலும் வேருனதோ அதேபோல் அக்ஞானமான தோற்றத்தால் விளங்கும் அந்தக்கரணம் ஆத்மாவினின்றும் வேருனது.

பழுதையைப் பாம்பு என்று எண்ணும்போது, பழுதையில் பாம்பு என்ற பொய் எண்ணத்தை நம் அறியாமையினுல் கற்பித்தோம் என்று சொன்னேம். அதே மாதிரி ஆத்மாவின் சக்தியை அனுத்மாவுடையது என்றும் அனுத்மாவான அந்தக்கரணத்தின் காரியத்தை ஆத்மாவின் பேரிலும் சுமத்துகிறேம். ஆத்மா ஸ்வயம் ஜோதியானது. அதன் பிரபையால் விளங்குகிறது அந்தக்கரணம். இது எதுபோல் இருக்கிறது என்ருல், வானில் சந்திரன் அசை வற்று இருக்கிறது. மேகமண்டலங்கள் அசைகின்றன. ஆனுல் சந்திரன் அசைவதாக எண்ணுகிறேம். இரும்பு ஸ்வபாவமாக குளிர்ச்சியானது. அக்னியின் உஷ்ணம் இதில் ஏறியிருக்கும்போது அது சுடுகிறது. சுடுவது அக்னி யினுல் முன்பு ஏற்பட்ட உஷ்ணம். ஆனுல் அதை இரும்பின் பேரில் சுமத்துகிறேம். இதுபோலவே ஆத்மாவுடன் சேர்ந்து இருக்கும்போது அந்தக்கரணத்துக்குக் கிடைத்த ஒளியின் சக்தி எல்லாக்காலத்திலும் வேலை செய்கிறது என்று உணராமல் அந்தக்கரணமே அறிகிறது என்று ஏமாந்துபோகிறேம். இதற்கு எல்லாம் காரணம் ஆத்மா வல்ல. அநாதிகாலமாய்தோன்றி நம்மை ஏமாற்றத்துக்குட் படுத்தும் அக்ஞானமே.

எல்லாவிதமான கஷ்டங்களுக்கும் காரணமாயுள்ள இந்த அவித்யையைத் தீர்க்க என்ன வழி? ஞானம் ஏற்படுவதுதான். படித்தவர்களுக்கும் படிக்காதவர்களுக்கும் ஏற்படும் அனுபவத்தின்படி தப்பான எண்ணத்தை உண்மையான எண்ணத்தால் போக்கடிக்கிறேம். பழுதை யில் பாம்பு என்ற தவருன எண்ணத்தை அது பழுதை

என்ற எண்ணத்தை உண்டாக்கிப் போக்குகிறோம். இது போலவே சரீரத்தின்பேரில் ஆத்மா என்ற எண்ணம் சுமத்தப்பட்டிருப்பதைப் போக்குவதற்கு ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை விளக்குவதேயாம். இது காரியத்தால் ஏற்படாது. பழுதையில் உள்ள பாம்பு புத்தியைப்போக்கடிக்க தடி உபயோகமற்றது. உண்மை அறிவுதான் தேவையாகும்,

உலகத்தில் உள்ள வஸ்துக்களை அறியும் விஷயத்திற்கும் ஆத்மாவை அறியும் விஷயத்திற்கும் ஒரு வித்தியாஸம் உண்டு. உலக விஷயத்தில் அந்த வஸ்துவில் ஏற்கனவே இல்லாமல் இருந்த ஒரு உண்மையைக்கொண்டு விளக்க வேண்டும். ஆனால் ஆத்ம விஷயத்தில் ஏற்கெனவே அது அறிவு மயமாக இருப்பதால் வேறு விஷயமான புது அறிவை அங்கு கொண்டு வருவது என்பது கிடையாது. இருக்கும் அக்ஞானத்தைப் போக்குவதே இதற்கு வழி.

அந்தக்கரணத்தின் அறிவு மனதின் பற்பல மாறுதல்களால் ஏற்படும் ஆனால் அந்தக்கரணம், மனது அறியும் தன்மை இவைகள் தாங்கள் தனியாக இருப்பதாயும் உணர்வதில்லை. ஒருவருக்கு மற்றொருவர் இருப்பதாயும் தெரிந்துகொள்வதில்லை, காரணம் யாதெனில், ஆத்மாவே இவைகளின் வேலைக்குக் காரணமாகிறது. இவைகள் ஆத்மாவுக்கு காரணமாகமாட்டாது.

உணரப்படும் வஸ்துவுக்கு ரூபமும் பரிமாணமும் உண்டு. அதை உணர்வது என்பது மனதின் வேலை. (நிச்சயம் சந்தேகம், ஞாபகம்) மனதின் இந்த காரியங்களில் அந்தக்கரணம் இருக்கிறது இவைகளுக்கு அப்பால் உள்ளது ஆத்மா இது எப்போதும் உள்ளது நிச்சயமானது, இருத்தலையும் இல்லாமையையும் அறிவது.

பலரின் நடவடிக்கைகளால் பல பலன்களை அடையும் முறையுடைய உலக வியவகாரங்களில் ஆத்மா கலந்து

கொள்வதில்லை. இது முடிவில்லாமல் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருப்பதால் அவைகளுக்கு ஆத்மா விலக்கானது இது அறிபவனையும், அறியப்படும் வஸ்துவை யும் அறியும் காரியத்திலும் உடனுடனே இருந்து கொண்டிருக்கிறது உலகவாழ்வில் சிலவற்றை ஏற்றுக்கொள் கிறோம் சிலவற்றைத் தள்ளிவிடுகிறோம், ஆனால் இதற்கும் ஆத்மா விலக்கானதே ஆகையால் ஆத்மா உலகில் சம்பந்தப் படாதது என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

சந்தேகம் : அந்தக்கரணத்தின் வேலைகளை அறியும் ஆத்மா உண்டு என்று சொல்லப்பட்டதே அது எதற்கு அந்தக்கரணமே அறியும் பேர்வழி உலகம் அறியப்படும் வஸ்து இந்த இரண்டுக்கும் மேல் மற்றொன்று எதற்கு ?

அந்தக்கரணமோ மற்ற எந்த வஸ்துவோ, மறையும்போது அந்த மறைவை உணர ஒரு மூல அறிஞர் தேவையே சில சமயங்களில் அறிபவன், அறிவு, அறியப் படும் பொருள், இவை மூன்றுமே இல்லாமல் போகும் உதாகரணம் சுஷுப்தி காலம் அப்போது அதற்கு மீறியுள்ள ஒன்று ஆத்மா இருந்துதானே ஆகும்.

சந்தேகம் : உலகை உணரும் அந்தக்கரணத்தையும் அதற்குட்பட்ட உலகத்தையும் உணர ஒரு ஆத்மா இருக்கிறது என்றால் அது இருக்கிறது என்று உணர மற்றொன்று தேவையாகுமே இது தொடர்ந்து போய் கொண்டே இருக்குமே ?

ஆத்மாதான் சாசுவதமானது என்ற உணர்வு ஸ்வயமாக உடையது இதை உண்டாக்க வேறொன்று காரணமில்லை. உலகில் அப்படி இல்லை மற்றொன்றின் உபகாரத்தினால்தான் அறிவு உண்டாகிறது.

நமது அக்ஞானத்தின் காரணமாக அந்தக்கரணத்தை ஆத்மா என்று எண்ணுகிறோம். இந்த இரண்டிற்கும் உள்ள

வித்தியாஸத்தை நாம் அறிந்து சொள்ளவேணும். உலகத்தின் ஆரம்பத்திலும், இருப்பிலும் அழிவிலும் எது எப்போதும் மாறுதல் அற்று இருக்கிறதோ அதுவே ஆத்மா.

சந்தேகம்: மாறுதலை அடைவது ஆத்மாவல்ல என்பதால் மாறுதல் அடையும் வஸ்து ஒன்று தனியாக இருக்கிறது. இதற்கு வேறுபட்டது ஆத்மா என்றல்லவா அர்த்தமாகும்.

பதில்: இது தவறு, ஸத்தியத்திற்கு மாறுதலும் இரட்டையும் கிடையாது. இந்திர ஜால வித்தைபோல் உலகத்தின் இரட்டைத் தோற்றம் அக்ஞானத்தினுல் ஆத்மாவின்பேரில் சுமத்தப்பட்ட தோற்றமேயாம். வித்தியாஸம் என்பது இல்லாவிடில் இரட்டை என்பது இருக்காது. ஸத்யத்துக்கு வித்யாஸம் என்பதே கிடையாது. ராமனுக்கும் கோவிந்தனுக்கும் வித்யாஸம் உண்டு என்ருல் அந்த வித்தியாஸம் அவர்களுள் ஒவ்வொருவருக்கும் உண்டு அந்த வித்தியாஸத்தைக் காட்டும் அம்சம் ஒன்றில் இருந்தாலன்றி அதைக்கூற முடியாது.

உலகம் தன்னுடைய இரட்டை ஸ்வபாவத்தை உணர முடியாது. அதற்கு அறிவு இல்லை. அதை ஞானரூபமாய் அறியவும் முடியாது. ஏனெனில் அறிவற்ற உலகத்தை அறிவோடு கூடிய மற்ருென்றுக்கு சமம் என்று சொல்ல முடியாது. ஞானத்தையும் உலகத்தையும் கலப்பதனுலும் இந்த சமத்வத்தைச் சொல்லமுடியாது. இவைகளுக்குள் ஒன்று சேர்க்கை என்பதும் ஏற்படாது.

ஆத்மா சுத்தமான ஸ்வயம் ஜோதியான ஞானம், உலகத்தின் காரியத்தில் சம்பந்தப்படவில்லை என்று வேதம் தெளிவாகக்கூறுகிறது.

மனது முதலிய எல்லா வஸ்துக்களும் இரட்டைத் [illegible]ற்றத்தையுடைய உலகமும் தோற்றமளிப்பதற்குக் [illegible]ரணம் அக்ஞானமே. உலகம் என்பது அறிவற்றதால்

தன் இருப்பைத் தான் அறிந்துகொள்ளமுடியாது. ஆத்மாவின் உதவியினாலும் அறியமுடியாது. ஏனெனில் எந்த ஆத்மாவின் ஸ்வப்ரகாசத்தால் அந்த அறிவு ஏற்பட வேண்டுமோ, அது கொடுக்கக்கூடிய வஸ்துவல்ல. ஆத்மாவிலுள்ள ஞானம் உலகுக்கு கொடுக்கப்பட்டு அதனால் உலகம் தன்னை அறிந்துகொள்வது என்பது முடியாது. ஆகவே மனது, உடல், வெளி வஸ்துக்கள் ஆகியவை ஆத்மாவாவதில்லை அதனுடன் ஒன்றாகச் சேர்ந்ததாயும் ஆகாது என்று ஒப்புக்கொள்ளவேண்டியிருக்கிறது. அவைகள் கற்பனையே. ஆதலால் இல்லையென்றே முடிவு செய்யவேணும்.

சந்தேகம்: உலகத்தின் துவைத பாவம் நேரடியான அனுபவத்தினால் அல்லவா ஏற்படுகிறது. எப்படி இது கற்பனை என்று சொல்வது.

பதில்: உலகத்தை வாஸ்தவத்தில் அறிவது என்பதே கிடையாது. ஸ்வயம்பிரகாசமான சித்ஸ்வரூபமான ஆத்மா ஒன்றே அனுபவிக்கப்பட்டு அறியப்படுகிறது. அது ஸ்வானுபவமானது. ஆத்மாவையும் அந்தக்கரணத்தையும் ஒன்று என்று எண்ணிக்கொள்வதால் அந்தக்கரணத்தில் தோன்றுபவை ஆத்மாவுடையதாக பிரமம் ஏற்படுகிறது. வெளிவஸ்துக்கள் அந்தக்கரணத்தில் தோற்றம் ஆகும் போது அது நேரடியான அனுபவம்போல் காண்கிறது. வாஸ்தவத்தில் நேரடியான அனுபவம் இங்கு கிடையாது.

எந்தக் காரணத்தைக்கொண்டும் ஆத்மா எந்தக் காரியத்தின் அம்சத்திலும் சேர்ந்தது என்று சொல்ல முடியாது ஆகாயத்தின் வர்ணம் நீலம் என்று காட்டுவது போல இது பொய் தோற்றம் அந்தக்கரணத்தின் யத்தனம் உடமை ஆசை முதலிய காரியங்களை ஆத்மாவுக்குள்ளது போல் ஆரோபணம் செய்து கொள்வது தான் காரணம்.

அந்தக்கரணத்தை சரியாக உணராத காரணத்தால் ஆத்மாவே துக்கத்துக்கு உட்பட்டது போல் காண்கிறது,

வேதம் (நேதி, நேதி, இதுவல்ல, இது வல்ல) தன் வாக்கினாலேயே உண்மையை விளக்கும் போது ஆத்மா வானது மேலே சொல்லப்பட்ட பொய்யான ஸம்பந்தங்கள் இல்லாமல் தன்னந்தனியாக சுத்தமாகத்தோன்றும் இதுவே விடுதலையாம்.

கேள்வி : இந்த உண்மையான அறிவு வேதத்திலிருந்து வருவது என்று சொன்னால் வேதம் ஸத்தியமானது என்று ஒப்புக்கொள்வதா. ஏனெனில் ஸத்தியத்திலிருந்துதான் ஞானம் ஏற்படும் என்று சொல்லுகிறீர்களே

பதில் : பொய்யான ஆதாரங்களிலிருந்து உண்மை ஞானம் உண்டாகாது என்று சொல்வதற்கில்லை. தூங்குபவன் திடீரென்று ஸ்வப்னம் கண்டு விழித்துக் கொண்டான் என்னும்போது வாஸ்தவமல்லாத பொய்யான ஸ்வப்னத்தில் ஏற்பட்ட தோற்றத்தால் தூக்கத்திலிருந்து எழுப்பப்பட்டு உண்மையான விழிப்பு உலகிற்கு வந்து சேருகிறான். ஆகையால் வேதமும் அதை உபதேசிக்கும் குருவும் ஸத்யமாக இருக்கவேண்டும் என்று அவசியமில்லை,

ஆத்மா, தான் என்ற காரணத்தாலேயே அனாத்மா விலிருந்து எப்போதும் விலகியே இருக்கிறது. சூரியனுக்கு இருட்டு உண்டு என்று சொல்வது எப்படி பொய்யோ அப்படியே ஆத்மாவுக்கு அனாத்மாவின் தோஷங்களின் ஸம்பந்தம் உண்டு என்று சொல்வதாகும் ஒரு சமயம் ஆத்மாவிடம் இருந்தது அது. நாசமாயிற்று என்று சொல்வதும் பொய் அது இருக்கவே இல்லை ஆகையால் அது மாற்றப்பட்டது என்று சொல்வதற்கு இடமில்லை.

இந்த நிலையை அறிந்த ஒருவனுக்கு, அதுவரை இந்த வேதவாக்யத்தை (உலகம் மித்யை) நன்கு தெரிந்து கொள்ளாமல் இருந்தோம் என்று ஆச்சர்யப்படுகிறான்.

இவ்விதம் ஸ்வஸ்வரூபத்தை அறிந்தவன். சுத்தமாயும், கர்மாவுக்கு சம்பந்தம் இல்லாதவனாகவும், தான் கர்மாவைச்

செய்யாமலும் அந்தக்கரணத்தின் வேலைக்கும் கட்டுப்படாதவனுக ஏகாந்த ஸுகத்தில் இருக்கிருன். உலக வாழ்க்கையிலிருந்து விலகி ஓய்வு பெற்ற கிருஹஸ்தன் எப்படி இருப்பானே அப்படியே தான் இவனும் இருப்பான்.

## மூன்ருவது அத்தியாயம்

உலகம் என்பது பொய்யான தோற்றம் (மாயை) என்பதை இதற்குமுன் சொன்னேம். ஆத்மாவுக்கு மாறுதல் இல்லை. சித் ஸ்வரூபமானது. இதற்கும் பொய்த்தோற்றத்துக்கும் அக்ஞானம்தான் ஸம்பந்தம். இந்த அக்ஞானத்தால்தான் உலகம் இருப்பதுபோல் காண்கிறது. அக்ஞானம் என்பதும் வாஸ்தவமானதல்ல.

வேதாந்திகளின் சித்தாந்தத்தில் இரண்டு முடிவான விஷயங்கள் உண்டு. 1 ஆத்மா 2 அனுத்மா. இவ்விரண்டில் அக்ஞானம் எதனுடன் சேர்ந்தது? இதை கவனிப்போம். அக்ஞானம் அனுத்ம வஸ்துவாக இருக்காது. ஏனெனில் அனுத்மாவே அக்ஞானமாயிருப்பதால். அக்ஞானத்துக்கு அது இருப்பிடம் என்றால் சரியல்ல. அக்ஞானத்தால் சந்தேகமும், குழப்பமும் ஏற்படுகிறது. அனுத்மாவுக்கு அறிவு என்பது இல்லாததால் இந்த அக்ஞானம் அத்துடன் சேர முடியாது. அறிவுள்ளதைத்தான் அக்ஞானம் என்பது சேரும். ஆகவே அக்ஞானம் அனுத்மாவை சேர்ந்ததல்ல.

அனுத்மா அக்ஞானமாகாவிடிலும் அக்ஞானத்திஞல் உண்டாகிறது என்று சொல்லலாமே?

அப்படியானுல் அனுத்மா ஏற்படுவதற்கு முன்பு அக்ஞானம் என்பது ஒன்று இருக்கவேண்டுமே ஏனெனில் காரியத்திற்கு முன் காரணத்தின் இருப்பு இன்றியமையாததாகும். ஆகவே அனுத்மாவின் காரண

மான அக்ஞானமும் அதற்குமுன்
ஆகையாலும் அனாத்மாவில் அக்ஞானத்துக்கு இருப்பிடம்

மேலும் அக்ஞானத்தைத்தவிர அனாத்மாவுக்கு வேறு குணம் கிடையாது. ஆகையாலும் அனாத்மா அக்ஞானத்தினால் அறியப்படும் வஸ்துவல்ல, அக்ஞானமே அக்ஞானத்தினால் அறியப்படமுடியாது. அக்ஞானத்தினால் அனாத்மா தோன்றுவதால் அனாத்மாவும் தனியாக முன்னமேயே இருக்கவேண்டுமே தவிர, இரண்டும் ஒன்றாக இருக்க முடியாது ஆகவே அனாத்மாவானது அக்ஞானத்துக்கு இருப்பிடமாகவும் ஆகாது. அக்ஞானத்தால் அறியப்பட வேண்டியதாயும் ஆகாது. ஆத்மா அனாத்மா இந்த இரண்டைத்தவிர வேறு ஒன்றும் இல்லை என்று நாம் தீர்மானித்திருப்பதால் இந்த அக்ஞானம் ஆத்மாவைச் சேர்ந்ததாகத்தான் இருக்கவேணும் "எனக்குத்தெரியாது" என்ற அனுபவம் ஆத்மாவுக்கு உண்டு என்று தெரிகிறது. சாந்தோக்ய உபநிஷத்தில் 7வது அத்தியாயத்தில் நாரதர் ஸனத்குமாரரிடம் சொல்லும்போது "நான் மந்திரத்தை மட்டும் அறிந்தவனே யன்றி ஆத்மாவை அறிந்தவனல்ல" என்கிறார்,

அனாத்மாவை அக்ஞான ஸம்பந்தமுள்ளதா என்று சோதனை செய்தபோது ஏற்பட்ட சிரமம் இப்போது இல்லை. ஆத்மா சுத்த சின்மயம், (அறிவுமயம்) அக்ஞானமயமல்ல. ஆனால் அக்ஞானத்தால் ஆத்மாவைப்பற்றிய அறிவில் பாதகம், (ஸந்தேஹம் தவறுதலான எண்ணங்கள்) வரலாம். அந்தக்கரணத்தில் ஏற்படும் ஸமஷ்டி அறிவினால் ஆத்மாவுக்கு வஸ்து ஞானம் வரலாம் இது இல்லாத நிலைமையும் இருக்கலாம். ஆத்மா அக்ஞானத்தால் ஏற்பட்டதல்ல ஆத்மா ஸ்வயமாக உள்ளது ஆகவே அக்ஞானம் ஆத்மாவுடையதாகத்தான் இருக்கவேண்டும். ஆத்மா அக்ஞானத்தினால் அறியப்படும் பொருளாகலாம்,

ஆத்மாவுக்கு அக்ஞானம் எப்படி சம்பந்தப் பட்டதாகும்? ஆத்மா அறிவுமயமானதன்ரோ. அறிவு அக்ஞானத்துக்கு விரோதமானதல்லவா. இருட்டுக்கு வெளிச்சம்போல் உள்ளதன்ரோ அப்படியிருக்க ஆத்மாவில் அக்ஞானம் சேர்ந்தது என்று எப்படி சொல்வது? மேலும், அக்ஞானத்துக்கு ஆத்மா இருப்பிடமாகில், அதற்கும் அதன் இருப்பிடம் என்பதற்கும் பேதம் வருமே. ஆத்மாவைத் தவிற வேறொன்றும் இல்லையாகையால் மேலே சொன்ன பேதமுள்ள இரட்டை இருக்கமுடியாதே. தவிற ஆத்மா அறிவிற்கும், அறிவின்மைக்கும் ஒரே காலத்தில் இருப்பிட மாக எப்படி இருக்க முடியும்.?

: அறிவு என்பது இரண்டுவகைப்பட்டது. அது மனதின் ஓர் நிலையாக இருக்கலாம், அல்லது சுத்த ஞான மயமாக (அனுபவமாக) இருக்கலாம். முதல் அர்த்தத்தில் ஏற்றுக்கொண்டால் அந்த அறிவு அக்ஞானத்துக்கு மாருனது. ஆனல் அக்ஞானத்திஞல் ஏற்பட்டது. ஆகவே அது ஆத்மாவாக முடியாது. இரண்டாவது அர்த்தத்தில் ஏற்றுக்கொண்டால் அறியாமைக்கும் அதற்கும் விரோத மில்லையே. அறிவின்மை என்பதே இதற்கு சாக்ஷியாகிறது. எனக்குத் தெரியாது என்று சொல்லும்போதும், அந்த அறியாமைத் தன்மையை அறியும் நபர் இருக்கவேணுமே. இல்லையேல் அறிவின்மை என்ற நிலையையே தீர்மானிக்க முடியாது.

ஆத்மா அத்துவிதீயமானது என்கிரோம். அதைத் தவிற, வேறொன்று என்பது கிடையாது என்றபோதிலும், அதில் வித்யாஸம் ஏதும் இல்லை என்றபோதிலும் அக்ஞானத் திஞல், மாயையின் தோற்றம்போல், வேறொன்று இருப்பது போல் காணப்படலாமல்லவா. இந்தத் தோற்றத்துக்கு ஆதாரமாயுள்ளது மட்டும் உண்டு. இதுவும் இரட்டை யாகக் காட்டும் மாயையேதான்.

அக்ஞானம் நீங்கினல் இரட்டைத் தோற்றத்தின் கெடுதல்கள் யாவும் போய்விடும் "தக்துவமஸி" என்ற வாக்கியத்துக்கு அர்த்தத்தைத் தெரிந்துகொண்டால் இந்த அக்ஞானம் நீங்கும். இதற்கு 'தத்' 'துவம்' என்ற இரு பதங்களின் உண்மையான அர்த்தத்தை அறியவேணும்.

'தத்த்வமஸி' என்ற வாக்கியத்தின் அர்த்தத்தைத் தெரிந்துகொண்டு ஒருவன் தானே பிரும்மம் என்று உணர்ந் 'நான்' 'எனது' என்ற எண்ணம் அவனுக்குப் போய்விடும். அப்போது வாக்குக்கும் மனதுக்கும் மீறின நிலையுடையவனுகிருன்.

என்ற பதத்தால் ஸுகஸ்வரூபமான ஆத்மா என்றும் "த்வம்" என்ற பதத்தால் "ஜீவாத்மா" என்றும் தெரியும்போது "தத்த்வமஸி" என்ற வாக்கியத்தால் பரமாத்மாவானது தோற்றமளிக்கும் அனுத்மாவல்ல, அது துக்கத்துக்குட்பட்டதல்ல என்றும் தெரிந்துகொள்கிருேம்.

பொதுவாக வாக்கியங்கள் அர்த்தத்தைப் போதிக்கும் விஷயத்தில் மூன்றுவிதமான ஸம்பந்தங்களை சாஸ்திரங்கள் கூறுகின்றன. 1 ஸாமானுதிகரண்ய சம்பந்தம், 2 விசேஷண விசேஷ்யபாவ ஸம்பந்தம், 3 லக்ஷ்ய லக்ஷணபாவ சம்பந்தம் என்று.

வெவ்வேறு அர்த்தம் உள்ள சொற்களை ஒரே வஸ்துவை குறிப்பதில் தாத்பர்யம் உள்ளதாகக் குறிப்பிடுவதே ஸாமானுதிகரண்யம் எனப்படுகிறது. உதாரணமாக எங்கோ எப்போதோ பார்த்த தேவதத்தனைக்கூறும் ஸ: என்ற சொல்லையும், இங்கு இப்போது நேரில் உள்ள தேவதத்தனைக்குறிக்கும் அயம் என்ற சொல்லையும் (அதாவது வெவ்வேறு அர்த்தமுள்ள இரு சொற்களையும்) ஒரே 'தேவதத்தன்' என்ற வியக்தியை தாத்பர்யத்துடன் ஸோऽயம் என்ற சொற்களுக்கும் ஸாமானுதிகரண்ய ஸம்பந்தம் உள்ளது. இவ்வாறே 'தத், துவம்' என்று வெவ்வேறு

அர்த்தங்களை உடைய (ஈஸ்வர-ஜீவ) இரு சொற்களையும் சுத்த சைதன்ய ரூபமான ஒரே வஸ்துவைத் தாத்பர்யத்துடன் கூறுவதால் தத்துவமஸி என்ற வாக்கியத்திலும் தத் துவம் என்ற இரு பதங்களுக்கும் ஸாமாநாதிகரண்யம் உள்ளது என அறியவேண்டும்.

குறிப்பு:— தத்த்வமஸி என்ற மகாவாக்கியத்தில் முன் கூறப்பட்ட மூவகையான ஸம்பந்தத்தின் மூலமாகவும் அகண்டார்த்தமான 'ஜீவபிரம்மைக்ய'த்தை சான்ருேர்கள் நன்கு விளக்கியுள்ளார்கள். மூன்ருவதான லக்ஷ்யலக்ஷண பாவ ஸம்பந்தத்தில் இங்கு பாகத்யாகலக்ஷணையின் மூலம் பொருள் கூற வேண்டும்.

முந்திய அத்தியாயத்தில் அந்வயம், வ்யதிரேகம், (இருத்தல் இல்லாமை) என்ற உபாயங்களால் 'தத்த்வமஸி' வாக்கியத்துக்கு அர்த்தம் தெரிந்துகொள்ளவேண்டும் என்று சொல்லப்பட்டது. இதில் ஒரு கேள்வி பிறக்கிறது. இந்த அந்வயம், வ்யதிரேகம் என்ற லக்ஷணங்களைக்கொண்டு தான் 'தத்துவமஸி' என்ற வாக்கியத்துக்கு அர்த்தம் செய்யவேண்டும் என்று வேதத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறதா அல்லது மனிதர்கள் தாங்களாகவே இந்த வழியை அனுசரிக்கிருர்களா? வேதத்தில் இது சொல்லப்பட்டிருக்குமேயாகில், அதை நிரந்தரமான புத்தியுடன் அனுசரித்துக்கொண்டு, நன்மை தீமை இரண்டு காரியங்களையுமே விட்டுவிட்டு, பிரும்மத்தை அறியலாம். ஆனால் அதைச்செய்யாமல் விட்டுவிட்டானேயாகில் வேதத்தின் கட்டளையை மீறியதாகவே பாபம் செய்தவனுவான். அப்படி வேத வாக்கியமில்லாமல் மனிதன் தானகவே இந்த வழியை அனுசரிக்கிருன் என்ருல், வேதத்தை மீறிய குற்றம் அவனுக்கு ஏற்படாது. இதற்கு "வேதத்தில் இந்தக்கட்டளை இடப்பட்டிருக்கிறது" என்றுதான் சொல்லுவோம். வேதத்தில் சொல்வது,

शान्तो दान्त उपरतस्तितिक्षुः समाहितो भूत्वा आत्मन्येवात्मानं पश्येत्

மனதை வெளி விஷயங்களில் செல்லாமல் தடுத்து, ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் இவைகளையடக்கி, பலனை விரும்பாமல் கர்மாக்களை அநுஷ்டித்து உலகவியவஹாரங்களில் ஈடுபடாமலிருந்துகொண்டு, சீதோஷ்ணங்களை ஸஹித்துக்கொண்டு பிரும்மத்தை அறியும்விஷயத்தில் மட்டும் கவனம் செலுத்தி குரு வாக்யத்திலும், உபநிஷத் வாக்யத்திலும் நம்பிக்கையுடன் தன்னுள்ளேயே பிரும்மத்தைக் காணவேண்டும்.

आत्मा वारे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः ।

ஆத்மா கட்டாயம் அறியப்படவேண்டும். அப்படியாகில் ஆத்மாவைப்பற்றிக் கேட்கவேண்டும். அதை மனதில் தீவ்ரமாக எண்ணிக்கொள்ளவேண்டும். அதையே இடைவிடாமல் தியானிக்கவேண்டும்.

ஆத்மா அறியப்படவேண்டும். அதற்கு சாந்தி முதலியவை ஸாதனங்கள். மேலும் சிரவணம், (கேள்வி) மனனம் (மனதில் தொடர்ந்து சிந்தனை) இவைகளின் அவசியத்தையும் குறிப்பிட்டிருக்கிறது. இதற்கு உபாயம், அந்வயம், வ்யதிரேகம் என்று ஏற்படுகிறது.

இந்த இரண்டு உபாயங்களால் மட்டும்தான் அறிய முடியுமோ, என்று கேட்குங்கால், அதற்கு பதில் சொல்லுவோம். முன்பு சொன்ன காரணங்களினால் ஒரு முமுக்ஷு-வானவன், நான் என்ற சொல்லிலடங்கிய தேகம், இந்திரியங்கள் இவைகள் ஆத்மாவல்ல என்று உணர்ந்த பின்பு அக்ஞானத்தின் காரணத்தால் அறிந்துகொள்ள முடியாத நிலையில் "அப்படியானால் 'நான்' என்பது யார்" என்ற ஸந்தேகத்தைக்கொண்டவனுக்கு ஸந்தேக நிவர்த்திக்காக வேதமாதா பிரியமாக "அப்பா நீ தான் பிரும்மம்" என்று உபதேசிக்கிறது.

அனாத்மாவினின்றும் ஆத்மாவை வேறுபடுத்திக்கொண்ட பின் வேதவாக்கியமான 'தத்துவமஸி'

என்ற உபதேசம் அக்ஞானத்தை நிவர்த்திக்கிறது என்று சொல்லப்பட்டதல்லவா. இதில் ஸாங்கிய மதத்தார் சொல்வதாவது. "உடலையும், இந்திரியங்களையும், மனதையும் ஆத்மா என்று எண்ணுவது அக்ஞானம். அனாத்மாவிலிருந்து ஆத்மாவை பிரிவுபடுத்திக்கொண்டுவிட்டால் வேதத்தால் அடையவேண்டியது ஏதும் இல்லையே. ஆகையால் அந்த பிரிவுபடுத்தும் அறிவு வேதவாக்கியத்திலிருந்துதான் வருகிறதே தவிற அதற்கு முன்னதாக ஏற்படுவதில்லை என்றுதான் தீர்மானிக்கவேணும்".

பதில்: இந்த வாதம் சரியல்ல. ஆத்மாவுக்கும் அனாத்மாவுக்கும் உள்ள பேதத்தை அறிந்தால் மட்டும் போதாது. ஆத்மாவைத்தவிற மற்ற அனாத்மவஸ்து யாவும் உண்மையல்ல கற்பிதமே. ஆத்மா ஒன்றுதான் ஸத்தியம் என்ற அத்வைதக்ஞானம் ஏற்படவேண்டும். இதைத்தான் வேத மகாவாக்யங்கள் உண்டுபண்ணுகின்றன. சாங்கியர்கள் அனாத்மாவான பிரதானத்தை (பிரகிருதியை) பொய்யானது என்று ஒப்புக்கொள்வதில்லை அந்த வாதம் சரியில்லை.

சிலர் நினைக்கிருர்கள் "அறியாமை தான் அக்ஞானம். இல்லாமையே அறியாமைக்குக் காரணம்". என்று. அதனுல் அவர்கள் கேட்பது 'இல்லாமை என்பது எப்படி உலகிற்குக் காரணமாக இருக்கமுடியும். ஒன்றுமில்லை என்பதிலிருந்து ஏதாவது ஒன்று உண்டாக முடியுமா? வேதமே இதைச் சொல்கிறதே 'कथमसतः सज्जायेत' (இல்லாததிலிருந்து உண்டு என்பது எப்படி உண்டாகும் என்று.

பதில்: அறியாமையென்பதால் அறிவு இன்மை என்று அர்த்தம் கொள்ளக்கூடாது. இது ஒரு இருத்தலேயன்றி இல்லாமையல்ல. ஸ்வப்னமில்லாத தூக்கத்தின்போது ஒரு வஸ்துவையும் நாம் அறியவில்லை. ஆனுல் இதை அறிவின்மை என்று சொல்லமுடியாது. இது ஒரு இருத்தலையே காட்டுகிறது. ஏனெனில், பின்குறிக்கப்படும் அனுபவத்தி

ஞை 8.

லிருந்து இது சொல்லப்படுகிறது. தூங்கி எழுந்தவன் அது வரை தனக்கு ஒன்றும் தெரியவில்லை என்று சொன்னானே யாகில் அறிவின்மையை அவன் தெரிவித்தான் என்று சொன்னால் சரியாகாது. இல்லாமை என்பது ஒரு பொருளை யும் ஒரு இடத்தையும் ஒட்டிச் சொல்லப்படுவது. ஒரு அறையில் ஒரு மனிதன் இல்லையென்று சொன்னால் அந்த மனிதனையும் அவனில்லாமல் இருந்த இடத்தையும் அறிந்தவன் தான் சொல்லமுடியும். தூக்கத்தில் அம்மாதிரி வஸ்துவின் நிலையோ அதன் இருப்பிடம் என்பதோ நாம் உணர்வதில்லை. உணர்வது என்றால் தூக்கம் கலைந்து விடுமே. ஆகையால் தூக்கத்திலுள்ள அறியாமை என்பது அறிவின் அபாவமென்று கூற முடியாது.

அறிவின்மை என்பது அப்போது இருந்தது. ஆனால் அதை நாம் உணரவில்லை என்று சொல்லக் கூடாதோ.

பதில்: உணரவில்லையெனில் அது அப்போது இருந்தது என்று எப்படிச் சொல்வது.

ஊகத்தால் முடியாதோ.

ஊகத்துக்கும் ஒரு மத்திய வஸ்து ஆதாரமாக இருக்கவேண்டாமோ, அதாவது தூக்கத்தின்போது அறிவின்மை என்பது இருந்தது என்று ஊகிப்பதற்கு. இதற்கு ஆதாரமாக ஏதோ ஒன்றை நாம் அப்போது அறிந்தோம் என்று சொல்ல வேண்டாமோ. அதன்பேரில் தானே ஊகம் சித்திக்கும். ஆனால் தூக்கத்திலோ இப்படி ஊகம் நிலைப்பதற்கு காரணமான எந்தவிதமானதும் இல்லையே.

தூக்கத்தில் இருப்பது எதுவும் நமக்கு ஞாபகம் வருவதில்லை என்ற காரணத்தால் அப்போது அறிவே இல்லை என்று ஊகிக்கலாமல்லவா.

பதில்: ஞாபகத்துக்கு வருவதில்லை என்ற காரணத்தாலேயே அறிவு எப்போதும் இல்லை என்று சொல்லிவிட முடியாது. பலகாலங்கள் கடந்தபின்பு என்ன நடந்தது என்று ஞாபகம் இருப்பதில்லை. அதனாலேயே அந்தக்காலம் முழுவதும் நமக்கு அறிவு என்பதே இருக்கவில்லையென்று சொல்லிவிட முடியுமா ? முடியாதே.

ஆகையால் அக்ஞானம் என்பது அறிவின் இல்லாமை என்று சொல்லக்கூடாது. அது ஒரு (வஸ்து) இருத்தலையே குறிக்கிறது. தூக்கத்தில் எல்லா வஸ்துக்களைப்பொறுத்தும் அறிவின்மை இருக்கிறது. ஆனால் அந்த வஸ்துக்களுக்கு தனியாக இருத்தல் என்பது கிடையாது. ஆத்மஸ்வரூபமானவையே அக்ஞானத்தால் தோற்றுவிக்கப்படுகின்றன.

ஒரு சிலரின் அபிப்ராயமாவது:— ஒரு வாக்யத்திற்கு அர்த்தம் சொல்லவேண்டுமானால் அதிலுள்ள வினைச்சொல்லிலிருந்து எழுவாய்க்கு ஸம்பந்தத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும். வேதவாக்யங்களோ சாமான்யவாக்யங்களோ, ஆத்மாவைப்பற்றி சொல்லுமிடங்களிலும் இப்படியேதான். ‘தத்துவமஸி’ என்ற வாக்கியத்திலிருந்து நான்தான் பிரும்மமென்ற தீர்மானத்தைத் தெரிந்துகொண்டு அதை தீர்க்கமாகச்சிந்தனை செய்து அதிலிருந்து நானே பிரும்மம் என்ற அனுபவம் வரவேண்டும். அதன் பின்தான் மோக்ஷம் ஏற்படுகிறது.

பதில்: சாதாரணமாக ஒரு வாக்கியத்திலிருந்து தீர்மானத்தைத் தெரிவிக்குமளவுக்கு அறிவு ஏற்படுகிறதென்பது வாஸ்தவம் தான். ஆனால் சில வித்யாஸ காரணங்களால் அந்த ஸம்பந்தம் ஸித்திக்காமல் போனால் வாஸ்தவ (வெறும் தீர்மான ஞானத்துக்கு மீறின) அர்த்தமான ஒற்றுமை விளங்கும். உதாஹரணம்.

நீலோத்பலம் என்ற சொல்லில் நீலத்தன்மையும் தாமரையும் எப்போதும் சேர்ந்தே இருக்கும். ஆனால்

குடத்திலுள்ள ஆகாசமும் மடத்தில் உள்ள ஆகாசமும் ஒன்றுதான் என்ற சொல்லில் இவ்விதத்தன்மை காண முடியாது. ஏனெனில் குடம் சிறியது அதனுள் அடங்கிய ஆகாசம் அந்த அளவுக்குட்பட்டது. மடத்தில் இருக்கும் ஆகாசமோ பெரியது. ஆகவே இரண்டும் ஒன்று என்று எப்படி சொல்வது என்ற சந்தேகம் வருகிறது. அப்போது குடத்தில் உள்ள ஆகாசமும் மடத்தில் உள்ள ஆகாசமும் ஒரே குணமுள்ளது என்றதற்கு மாத்திரம் இந்த வாக்கியம் உபயோகமாகிறது. இதேமாதிரி 'தத்வமஸி' என்ற வாக்கியத்தால் தத் என்ற பதத்தால் கண்ணுக்குத்தெரியாத ஒரு வஸ்துவின் விசேஷத்தையும் 'துவம்' என்ற பதத்தால் கஷ்டத்தை அனுபவிக்கும் மனிதனேயும் குறிக்கும்போது இரண்டிற்கும் உள்ள ஒற்றுமையை விளக்கும்போது மேலே சொன்ன கிரமம் ஏற்படும். ஆனால் முன் சொன்னபடி (லக்ஷணங்களைக்கொண்டு) யோசித்துப்பார்த்தால் ஸாக்ஷாத்கார ஞானமே வாக்யத்தினல் ஏற்படும் என்று சொல்லலாம். இது நிதித்யாஸனத்தினல் (தொடர்ந்து சிந்தனையால்) வரும் என்று சொல்வது சரியல்ல.

கேள்வி: தத்துவமஸி என்ற வாக்கியத்தில் துவம் என்பது ஜீவனைக்குறிக்கிறது. தத் என்பது கண்ணுக்குப் புலப்படாத வஸ்துவைக் குறிக்கிறது. இந்த வாக்கியத்தில் இல்லாத ஐக்கியத்தை இதில் எப்படி உணருவது?

பதில்: துவம் பதம் துக்கத்தை அனுபவிக்கும் மனிதனைக் குறிக்கிறதுதான். ஆனல் தத் பதத்துடன் (ஸமானுதிகரணமாக) சேர்த்து துவம் பதம் அறியப் படுவதால் துவம் பதத்தால் குறிக்கப்படுபவனும் துக்க மில்லாத ஆனந்த ரூபியானவன் என்றே தெரிந்துகொள்ள வேண்டும். தத் என்ற பதம் கண்ணுக்குத் தெரியாததைக் குறிக்கிறதுதான். ஆனல் பக்கத்திலுள்ளதும் அனுபவத் திற்குட்பட்டதுமான துவம் பதத்தின் தாத்பர்யத்துடன் சேர்த்து சுட்டிக்காட்டப்படுவதால் தத்பதத்தால் சொல்லப்

படுவதில் உள்ள "எட்ட இருத்தல்" "காணப்படாதது" என்ற தன்மைகள் நீங்கிவிடுகின்றன. ஆகவே எழுவாய், பயனிலை என்றவைகளினால் கிடைக்கும் குறுகிய அர்த்தத்திற்கு மீறினதான விளக்கம் ஏற்படுகிறது.

மேலும் தத் என்ற பதத்தால் குறிக்கப்படும் (சுத்தம் நிர்குணம் முதலிய) விசேஷத்தை உடையது துவம் பதத்தால் குறிக்கப்படும் ஜீவன் என்று தெரிந்துகொள்ள வேண்டும். ஆத்மா சுத்த சின்மயமானது. இதுவே ஜீவனிடத்தில் பிரகாசிக்கிறது. அந்தக்கரணத்திற்கு இந்த பிரதிபிம்ப சக்தி கொடுக்கப்படாவிடில் அது அறியவே முடியாது. ஆகவே "நீ" என்று சொல்லப்பட்ட, அந்தக்கரணவிருத்தியுடன் கூடிய ஜீவனுக்கு ஆதாரமாயுள்ள ஆத்ம சைதன்யத்தைக் குறித்தே இரண்டிற்கும் ஒற்றுமை சொல்லப்படுகிறது.

அந்தக்கரணத்துக்கு (புத்திக்கு) தானாக அறியும் சக்தி உண்டு. இந்த அம்சத்தில் இதற்கும் ஆத்மாவுக்கும் சாமான்யமான ஒற்றுமை இருக்கிறது. சில வேற்றுமையும் இருக்கிறது. மனது பற்பல வஸ்துக்களை அதனதன் ரூபங்களினால் அறிகிறது. ஆத்மாவோ என்றால் எவ்வித மாறுதலுமில்லாமல் ஸ்வயம் ஜ்யோதிஸாக ப்ரகாசிக்கின்றது. மேலும் அந்தக்கரணத்தில் ஏற்படும் அறிவு அந்தந்த வஸ்துவைப் பொருத்தமட்டில் உள்ளே ஏற்படுவதுமட்டும் தான். ஆத்மா விஷயத்திலோ எனில் இவ்வித வரம்பு ஏதுமில்லாமல் ஸ்வயமாக அகண்டமாய் உள்ள அறிவு ஆகும்; மனது எதை உணர்கிறதோ அதைப்பொருத்தமட்டில்தான் அறிவுடையதாக ஆகிறது. இந்த அறிவு ஏற்படும் அம்சத்தில் இது ஆத்ம சைதன்யத்துக்கு சமானமானது என்று சொல்லவேணும்.

புத்தியின் விஷயத்தில், அறியப்படும் பொருள், அறியும் தன்மை என்ற வித்தியாஸங்களைக் காணலாம். ஆனால்

ஆத்மாவிடத்திலோ, அது ஸ்வயம் ஜ்யோதியானதாலும் சாசுவதமானதாலும் ஸர்வவ்யாபியானதாலும் மேலே சொல்லப்பட்ட பேத அம்சங்களை அதில் காணமுடியாது.

இந்த புத்தி 'நான்' என்ற நிலையில் சில சமயம் மறைந்துவிடுகிறது. உதாஹரணம் நித்திரை. அப்போது சாக்ஷி (பார்த்துக்கொண்டிருக்கும்) சைதன்யம் மட்டுமே உளது, ஆகவே புத்திக்கும், அந்த சைதன்யத்திற்கும் வித்தியாஸத்தை நாம் உணரலாம். ஆத்மா சுத்த ஞான மயமானது. எப்போதும் உள்ளது. ஆகையால் அதில் காண்பது காணப்படுவது என்ற வித்தியாஸ நிலையே கிடையாது.

ஆத்மா சின்மயமானது முக்காலத்திலும் உள்ளது. ஆகவே அதற்கு இரண்டாவது (அதைத்தவிர வேறு) கிடையாது. மனதும் அறிவுடையதாதலால் ஆத்மாவைப் போல் இரட்டையற்ற நிலை உடையது என்று சொல்ல முடியாது. ஏனெனில் மனதுக்குத் தானாக அறியும் சக்தி இல்லை. ஆத்ம சைதன்யத்தினுடைய பிரகாசத்தால் இது பிரகாசிக்கிறது. மனது நாசத்தை உடையது. அது ஆத்மாவைப்போல் சாசுவதமானது அல்ல.

அந்தக்கரணத்தின் அறிவும் அந்தந்த வஸ்துவைப் பொருத்து அந்தந்த சமயத்தில் தான் ஏற்படுகிறது. 'நான் புத்தகத்தை அறிகிறேன்' 'நான் சுகி', 'நான் துக்கமுடையவன்' என்று சொல்லும் சமயங்கள் வெவ்வேறானவை. இவைகளில் ஒற்றுமையைக்காட்டுவது இதை பல சமயங்களிலும் தொடர்ந்து அறியும் மனிதனே. "நான் பாலனாக இருந்தவன் இப்போது கிழவனாகிவிட்டேன்" என்று சொல்வது போலவே. ஆகையால் பல காலங்களில் சரீரம் மாறுதல் அடைவதுபோல் இந்த ஜீவனுக்கும் ஔபாதிகமான மாறுதல்கள் காணப்படுகின்றன.

ஸ்வமஹிமையால், ஸ்வயம்பிரகாசமாயுள்ளது கூடஸ்தனென்று ஆத்மாவைச் சொல்லுகிறோம். (மலையின் சிகரம்

போல் ஸ்திரமாயிருக்கும் காரணத்தால் கூடஸ்தன் என்று குறிப்பிடப்படுகிறது.) இது மாறுதலற்றது இதர வஸ்துவின் அபேக்ஷையில்லாமல் தானே பிரகாசிக்கிறது. அனுபவங்களின் மாறுதல்களை ஸாக்ஷியாக இருந்துகொண்டு பார்ப்பதுமிதுவே. இதனுடைய அபூர்வகுணத்தால் இதில் எவ்விதமாறுதலும் ஏற்படுவதில்லை.

வெளித்தோற்றத்தை அளிக்கும் சரீரத்தை உத்தேசித்து மனதின் அறிவு உட்புறமுள்ளது என்று சொல்லலாம். ஆத்மாவின் வ்யாபகம் ஆகாசம்போல் எங்கும் உள்ளது. புதிதாக அனுபவமோ அல்லது அபிப்பிராயமோ ஏற்படும் போது மனது அறிகிறது என்கிறோம். ஆனால் ஆத்மா தானே அறிவுமயமானது, இதனால் தெரியவருவது என்னவெனில், புத்தியின் அறிவுக்கு சந்தர்ப்பங்களும் காரணங்களும் உண்டு. ஆத்மாவின் அறிவிற்கு காரணம் இல்லை. அது ஸ்வயமாக எப்போதும் இருக்கிறது. உதாஹரணம்:— ஒரு ஜங்கம வஸ்து அலைந்து அசந்துபோய் ஒரு நிலையில் இருப்பதற்கும் ஒரு மலை சாசுவதமாக ஸ்திரமாக ஒரே இடத்தில் இருப்பதற்கும் உள்ள வித்தியாஸம்போல் உள்ளது.

கேள்வி:-ஆத்மா லக்ஷ்யம், அஹங்காரம் (நான் என்பது) லக்ஷணம் என்று சொல்லிய இடத்தில் அவ்விரண்டிற்கும் சம்பந்தம் உண்டா இல்லையா? சம்பந்தம் உண்டென்று சொன்னால் ஆத்மாவுக்கு இதனால் அளவுக்குட்பட்டது என்ற தோஷம் ஸம்பவிக்கும், சம்பந்தமில்லை என்றால் நான் என்பது எப்படி ஆத்மாவுடன் ஸம்பந்தப்பட்டதாக ஆகும்.

பதில்:-மனதின் விகாரங்களுக்கு உட்பட்டதால் அறிவு என்பது, உண்மையானது, பொய்யானது, சந்தேகமானது என்று வகுக்கப்படும். நமக்கு அநாதிகாலமாக உள்ள அக்ஞானத்தின் காரணமாக ஏதோ ஒருவிதமான சம்பந்தம் இருப்பதுபோல் காணப்படுகிறது என்று தான் சொல்லவேணும். ஆனால் உண்மையில் இது ஆத்மாவுக்கு சம்பந்தப்

பட்டதல்ல. ஆத்மாவின் பேரில் அக்ஞானத்தால் சுமத்தப் பட்டதேயாகும்.

!: புத்தி என்ற ஆதாரத்தின் சம்பந்தமில்லாவிடில் ஆத்மாவுக்கு அறிதல் என்ற காரியம் தோன்றுதாகில் புத்திக்கு மீறியதான ஒரு பேரறிவு இருக்கிறது என்று ஏன் அங்கீகரிக்கவேண்டும்.

கீழே கண்டபடி பேரறிவு தெரியப்படுகிறது. நம் மனதில் விகாரங்கள் தோன்றி மறைகின்றன. ஆனால் அந்த மாறுதல்களை மாறுதல்களே உணரமுடியாது. இப்படி மாறாமல் ஆனால் மாறுதலைத்தொடர்ந்து இருந்துகொண்டு அறிவதற்கு ஒரு பேரறிவு தனியாக எப்போதும் இருக்க வேணும். மேலும் நம் மனதின் எண்ணங்கள் சிலது அனுகூலமானதும் சிலது பிரதிகூலமானதுமாக இருப்பதால் அவைகளை ஒப்புக்கொள்ளவும் தள்ளவும் ஏற்படுகிறது. ஆனால் இவ்விதம் ஒப்புக்கொள்ளவோ தள்ளவோ சக்தி யுடைய அதில் கலந்து தானே மாறுதலுக்குட்படாத ஒரு பேரறிவு இருக்கவேண்டுமல்லவா. ஆகவேதான் பேரறிவு இருக்கிறது, அது மனதுக்கு அப்பாற்பட்டது என்று சொல்லுகிறோம்.

இப்படி மாறுதலடையும் வஸ்துக்களெல்லாம் அனாத்மா வென்று பல காரணங்களைக்கொண்டு 'தத்துவமஸி' என்ற வேதவாக்யம் உணர்த்துவதுடன் (இப்படி ஆத்ம, அனாத்ம பிரிவு ஞானம் ஏற்பட்டபின்னும்) சிருஷ்டிக்குக் காரணம் அக்ஞானமே என்றும் போதித்து அக்ஞானத்தை நிவர்த்திக் கிறது.

முன்சொல்லப்பட்ட தீர்மானங்களை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்வதற்காக மீண்டும் விளக்கம் சொல்லப் படுகிறது. 'தத்துவமஸி' என்ற வாக்கியத்தைப் பார்ப் போம். 'தத்' என்ற பதத்தினால் பல வஸ்துக்கள் குறிக்கப் படும். முக்கியமாக சமீபத்தில் இல்லாததும் வேறு ஒன்றி னால் (ஆகாசம் காலம் முதலியவையால்) தியானிக்கப்பட

வேண்டியதாயுமுள்ளதைக் குறிக்கிறது. அதுபோல் 'துவம்' என்ற பதமும் கேட்பவனுக்கு பக்கத்தில் உள்ளதும் முக்கியமாய் சுகதுக்கங்களுக்குட்பட்ட சரீரத்தையுமே உணர்த்து

ஆனால் 'துவம்' பதத்தில் உள்ள துக்ககுணமும் 'தத்' பதத்திலுள்ள பிரத்யக்ஷ குணமும் வேதவாக்கியத்துக்கு அர்த்தமாகாது. ஏனெனில் சாதாரணமான அர்த்தத்தில் 'தத்' என்ற பதமும் 'துவம்' என்ற பதமும் (எழுவாய் பயனிலைபோல) ஒன்றுக்கொன்று வித்தியாஸமற்றதாக ஆகாது. ஒன்று பிரத்யக்ஷத்தையும், மற்றது கண்ணுக்குப் புலப்படாததையும் குறிக்கவேண்டியிருக்கிறது.

இப்படி ஒன்றுக்கொன்று ஸாம்மியம் சொல்லமுடியாமல் இருப்பதால் இவைகளில் ஒரு மறைவான அர்த்தம் இருக்கிறது என்று தெரிந்துகொள்ளவேணும். இதற்கு உதாஹரணம சொல்வோம். 'கங்கையில் குடி இருக்கிறான்' என்று சொல்லும்போது 'கங்கை' என்ற பதத்திற்கு 'கங்கை ஜலம்' என்று பொருள் இல்லை. "கங்கையின் கரை" என்றுதான் தாத்பர்யம். ஜலத்தில் குடியிருக்க முடியாதல்லவா அதனால் ஜலம் என்று பொருள்பட பதம் இருந்தாலும் அதற்கு மறைமுகமாகவுள்ள அர்த்தத்தையே எடுத்துக்கொள்ளுகிறோம். ஆனால் அதன் வாஸ்தவமான பொருளை அறியாமல் விட்டுவிடவில்லை. வாஸ்தவமான அர்த்தமும் மறைவாயுள்ள அர்த்தமும் ஒன்றுக்கொன்று சம்பந்தமற்றதாகவோ விரோதாம்சம் உள்ளதாகவோ கிடையாது. இதேபோல் 'துவம்' என்ற பதத்தால் ஆத்மாவுடன் சேர்த்து அர்த்தம் செய்யும்போது அதன் வாஸ்தவமான 'சரீரம்' என்ற அர்த்தம் விடப்பட்டு விடுகிறது. அதுமாத்திரமல்ல, வாஸ்தவமான அர்த்தம் பொய் தோற்றத்தை சொல்வதால் அதை மறைமுகமான அர்த்தம் முற்றிலும் மாற்றிவிடுவதால் வாஸ்தவமான அர்த்தம் என்று சொல்லிவந்ததை இல்லாமலேயே செய்து விடுகிறது.

இது ஆச்சரியமானது அல்ல. சாமான்யமாக பேசுகை யில், 'பாம்பு கயிறல்லவா" என்கிறோம். 'பாம்பு' என்ற பதத்தின் வாஸ்தவமான அர்த்தம் 'கயிறு' ஆகாது. இது வரை பாம்புபோல் தோன்றியது உண்மையில் கயிறு அல்லவா. அதை கயிறு என்ற மறைமுகமான அர்த்தத் தில் ஏற்றுக்கொள்ள வேண்டும். 'பாம்பு'ம் 'கயிறும்" ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டதல்ல. இதில் உண்மை யாகத் தோன்றும் அர்த்தம் மறைவான அர்த்தத்தால் நிராகரிக்கப்படுகிறது இதேபோலவே 'துவம்' (நீ) என்பது ஆத்மாவைக் குறிப்பதாக ஆகும்.

இப்படிப்பட்ட அனுபவ ஞானம் வேதவாக்கியத்தால் தெளிவாக்கப்படுகிறது என்ற எண்ணம் ஏற்கனவே ஆத்ம அனாத்ம வித்தியாஸ அறிவுள்ளவனுக்குத்தான் தோன்றும் அதற்கு அந்வயம், வியதிரேகமாகிய யுக்திகள் ஏற்கனவே இருக்கவேண்டும். இப்படி எண்ணுவானேயாகில், சரீரம், மனஸ, இந்திரியங்கள் இவைகளை அனாத்மா என்று தள்ளி விட்டு ஆத்மாவினுள்ளே (தன்னுள்ளே) உற்று நோக்குவான். அந்த மட்டில் அவனுக்குத் தான் தனி யானவன் என்ற எண்ணம் நீங்கிவிடுவதுடன் 'துவம்' என்ற பதத்தின் அர்த்தமான வஸ்துவில் 'தத்' என்ற பதத்தின் அர்த்தம் உட்புகுந்திருப்பதையும் உணர்வான்.

கேள்வி: மாயையைப்பற்றிச்சொன்ன திருஷ்டாந்தத்தை இங்கு எடுத்துக்கொள்வோம். கயிற்றை பாம்பு என்று எண்ணியபோது வாஸ்தவத்தை உணர்ந்தால் பாம்பு என்ற எண்ணம் போய் கயிறு என்ற எண்ணம் வரும்போது நம் முன் பிரத்யக்ஷமாக கயிறு இருக்கிறது. சரீரம் அனாத்மா என்ற அறிவு வந்ததும், அதாவது சரீரமே ஆத்மா என்ற பிரமை நீங்கியதும் சரீரம் அனாத்மா என்ற சுய அறிவு ஏற்படவேண்டும். சரீரம் அனாத்மா என்று காணப்பட வேண்டுமே. அப்படி இருப்பதில்லையே. ஆத்மாவை உணர்ந்தவுடன் அனாத்மாவைப்பற்றிய தோற்றமே முடிவடைந்துவிடுகிறதே இதெப்படி ஏற்படுகிறது.

சரீரமே ஆத்மா என்று எண்ணுவது எப்படி பிரமையோ அதேமாதிரி அனாத்மா என்று ஒன்று இருக்கிறது என்று எண்ணுவதும் பிரமையேயாகும். இரண்டு எண்ணங்களும் பொய் தோற்றங்களே. இந்தப்பொய் தோற்றத்துக்கு காரணம் அக்ஞானம்தான். அக்ஞானம் நீங்கினால் ஆத்மா மட்டும் மீதமாகிறது.

ஜீவாத்மாவே பரமாத்மாதான். ஆனால் இதை உணராதவனுக்கு 'துவம்' என்ற பதத்திற்கு விளக்கம் தெரிந்து கொள்ளாமல் சரீரத்தையே ஆத்மா என்று எண்ணுகிறான். இவன் பரமாத்மாவை மற்ற வஸ்துக்களைப்போல் தனக்கு வெளியானதாயும் சரீரத்தினால் அறியப்படவேண்டியது போலவும் எண்ணுகிறான். ஆத்மா இவனுக்கு பிரத்யக்ஷமாகத் தோன்றுவதில்லை. அனாத்மாவான சரீரம்தான் பிரத்யக்ஷமாகத் தோன்றுகிறது.

கேள்வி: இவனுக்கு எப்படி ஆத்மா வேறாகத் தோன்றுகிறது?

பதில்: மஞ்சள் காமாலை உடையவனுக்கு பார்த்த வஸ்துக்கள் மஞ்சள் நிறமாகத் தோன்றும். அந்த வஸ்துக்களில் மஞ்சள் இல்லை. இவனுடைய தேகத்தில்தான் (கண்ணில்) அந்த மஞ்சள் வியாதி இருக்கிறது. இதுபோல் தன்னுள் இருக்கும் சைதன்யம் எங்கோ வெளியில் தனியாக இருப்பதுபோல் தெரிகிறது.

ஆகையால் 'தத்துவமஸி' என்ற வாக்கியத்தால் அத்துவிதீயமான ஆத்மாவே போதிக்கப்படுகிறது என்று முடிவு செய்கிறோம். மேலும், 'தத்' 'துவம்', என்ற பதங்களை மேலேசொன்ன 'தத்துவமஸி' என்ற வாக்கியத்தில் இல்லாமல் தனியாக உபயோகிக்கப்படும் இடங்களிலும் அவை எந்த அர்த்தத்தில் உபயோகப்படுத்தப்படுகின்றன என்று கவனிக்கவேண்டும். சாமானிய உபயோகத்திலிருந்து இவை எந்த அர்த்தத்தில் உபயோகப்படுத்தப்

பட்டிருக்கின்றனவோ அதிலிருந்து வாக்கியத்திலும் அவைகளை அறிந்துகொள்ளவேண்டியது.

!: ஒரு பதத்துக்கு சாதாரணமாக ஒரு அர்த்தம் இருக்கும். ஆனால் அதை ஒரு வாக்கியத்தில் உபயோகிக்கும்போது அந்த அர்த்தம்தான் உள்ளது என்று எப்படி சொல்லலாம். வாக்கியத்தின் குறிப்பிட்ட நோக்கம் வேறு இருக்குமல்லவா

!: பதங்களுக்குத் தனியான அர்த்தம் இருந்த போதிலும் ஒரு வாக்கியத்தில் அவைகளை உபயோகித்திருக்கும் வழியிலிருந்து குறிப்பிட்ட அர்த்தத்தை உடையதாய் சொல்லலாம். உதாஹரணம் எல்லா பிராம்மணர்களையும் போஜனம் செய்துவை என்று சொன்னால் எல்லா என்ற பதத்தில் சில குறிப்பிட்டவர்களும் அடங்கினவர்கள் தான்.

மோக்ஷம் அடைய விரும்புபவனுக்கு ஆத்மா, அனாத்மா இவ்விரண்டிற்கும் உள்ள வித்தியாஸ அறிவும் வேத வாக்கியமும் சேர்ந்துதான் ஞானத்தைக் கொடுக்கும். ஆத்ம அனாத்ம விவேகம் மட்டும் இருந்தால் போதாது. அனுமானத்தினால் புத்தி, அந்தக்கரணம் முதலியவை ஆத்மாவல்ல என்று மட்டும்தான் அறிந்துகொள்ளலாம். முடிவான ஞானம் பெறுவதற்கு இது போதாது. சுருதி வாக்கியம்தான் (தத்துவமஸி) அதைக்கொடுக்கும்.

வேதவாக்கியம் பிரமாணம் என்று கொள்ளாமல் அனுமானம் மாத்திரம் ஆதாரமாக எண்ணினால் லக்ஷ்யத்தை அடையாமல் இருப்பதுடன் கஷ்டமான நிலைமையும் ஏற்படும். உதாஹரணமாக பௌத்தர்கள் வேதத்தை ஆதாரமாக ஏற்றுக்கொள்ளாமல் அனுமானத்தையும் புத்தியையும் யுக்தியையுமே உபயோகித்ததால் ஆத்மாவே கிடையாது என்ற தப்பான அபிப்ராயம் கொண்டவர்களானார்கள்.

வேதத்தை அங்கீகரிக்காமல் இருப்பதற்கு காரணம் இல்லை. ஏற்கனவே உலகத்துக்கு தெரிந்த விஷயத்தை சொன்னால் அதைப்பற்றிச்சொல்லும் கிரந்தத்தை தள்ளி விடலாம் அல்லது இதே விஷயத்தை வேறு இடத்திலிருந்து தெரிந்துகொள்ளக்கூடியதாயிருந்தாலும் அல்லது ஒன்றுக் கொன்று விரோதமான தீர்மானங்களை சொல்வதானாலும் இந்த கிரந்தத்தை தள்ளிவிடலாம் வேதத்தைப்பொருத்து இப்படி எவ்வித ஆக்ஷேபணையும் சொல்வதற்கில்லையே. ஆகவே வேதம் ஒப்புக்கொள்ள வேண்டியதேதான்.

ஆத்மாவுக்கு துக்கம் என்பதே கிடையாது. அது சிருஷ்டிக்கப்பட்டவைகளில் சேர்ந்ததல்ல என்ற விஷயங் களை வேறு எங்கே இருந்தும் தெரிந்துகொள்ள முடியாது. இதை வேதம் சொல்லுகிறது. இது தவறு என்று சொல்லவோ மறுக்கவோ முடியாது. ஆகவே வேதம் நம்பத்தகுந்த பிரமாணமாகிறது என்று நாம் ஒப்புக்கொள்ள வேண்டும்.

இப்படி பிரமாணங்களினால் அனாத்மாவைப்பற்றிய ஸந்தேகங்கள் எல்லாம் நீக்கப்பட்டபின் சுருதிவாக்கியத்தில் எவ்வித சந்தேகமும் ஏற்பட இடமில்லை. அறிவுக்குப் புலனாகும் உலகத்தைப் பொருத்துத்தான் சந்தேகம் ஏற்பட இடமுண்டு. ஆனால் ஆத்மாவை அறிந்தபின் அறிவிற்கு விஷயமாகும் இதர வஸ்துவே இல்லை என்று ஏற்பட்டபின் வேத வாக்கியத்தில் சொல்லியிருக்கும் விஷயத்தில் சந்தேகம் ஏற்பட நியாயமே இல்லையே.

இதுவரை பிரமாணங்களை வைத்துக்கொண்டு சொன்னோம். இனி பிரமேயத்தை வைத்துக்கொண்டு பார்ப்போம். வேதம் சொல்லுகிறது ஆத்மாவைத் தவிற வேறில்லை என்று. இதைக்குறித்து சந்தேகத்துக்கு இடமில்லை. ஆத்மா ஸ்வயம் பிரகாசமானது வேறொன்றின் உதவி இதை அறிய தேவையில்லை. ஆகவே தீர்மானத்துக்கோ சந்தேகத்துக் கோ இது கட்டுப்பட்டதல்ல. ஆகையால்தான் பெரியோர்

கள் சொல்வதென்னவென்றால் "சந்தேகத்துக்கு காரண மாகும் பொருள் ஆத்மாவாக முடியாது"

வேதவாக்கியம் ஸ்பஷ்டமாகத்தான் இருக்கிறது. தெளிவாய் விளக்குகிறது. ஆனால் நமக்கு அந்த தத்து வார்த்தம் விளங்குவதில்லையே என்றால் அதற்கு வேதம் பொருப்பல்ல நாமேதான் பொருப்பு. இதற்கு நம்முடைய புத்தியின் குறைவும் காரணம். மேலும் வேதத்தின் (அபரோக்ஷானுபூதி) தத்துவார்த்தம் அதற்கு யோக்கியதை உடைய உத்தம அதிகாரிக்குத்தான் புலப்படும். (ஆகவே நம்மை உத்தம அதிகாரிகளாக செய்து கொள்ளவேணும்).

அந்வயம் (இருத்தல்) வியதிரேகம் (இல்லாமை) என்ற தர்க்க யுக்திகளால் ஒரு வஸ்துவின் ஸ்திதியை அறிகிரே மென்றால் இது நம்முடைய மனுஷிய யுக்தியினால் ஏற்படுத் திக்கொண்டதல்ல. இதற்கு வேதமே ஆதாரம். அந்தக் கரணத்தினுடைய பல மாறுதல்களேயும் எண்ணங்களேயும் ஆத்மா அறியும். ஆனால் ஆத்மாவுக்கு மாறுதல் கிடையாது. நான் என்று சொல்பவனுடைய மனதிற்கு கந்தம் முதலிய வாசனையின் ஞானம், அந்தந்த இந்திரியங்களின் செயற்கையும் காரியத்தினாலுமே உண்டாகிறது. இப்படி மனதிற்கு ஏற்படும் பல மாறுதல்களேயுடைய நிலே. சாக்ஷி யாகத் தான் சம்பந்தப்படாமல் இருந்துகொண்டு எல்லா வற்றையும் அறியும் சக்தி உடையது ஆத்மா.

"தத்துவமஸி" என்ற வாக்கியார்த்தத்துக்கு அனுகூல மாக பல முந்திய வாக்கியங்கள் எப்படி உண்டோ அதே போல் 'அஹம் பிரும்மாஸ்மி' (நானே பிரும்மம்) என்ற வாக்கியத்துக்கு அனுகூலமாக விளக்கங்கள் கொடுக்கும் முந்திய வாக்கியங்கள் பல உண்டு, 'அஹம் பிரும்மாஸ்மி' என்ற வாக்கியத்தில் 'அஹம் (நான்) என்ற பதம் பந்தத்தி லிருந்தும் அக்ஞானத்திலிருந்தும் விடுபட்ட முமுக்ஷுவைக் குறிக்கும்,

கேள்வி: 'அஹம்' என்ற பதத்துக்கு எப்படி சாமான்ய அர்த்தம் இல்லாமல் விசேஷ அர்த்தத்தை கல்பிக்கிறோம்.

பதில்: நம்முடைய அனுபவத்தில் இது தெரிகிறது. சூரியன், சந்திரன், அக்னி இவைகள் ஏதும் இல்லாதபோதும் பேச்சும் இல்லாதபோதும், வெளியிலிருந்து எவ்வித வெளிச்சமும் இல்லாதபோதும் தன் உள்ளுக்குள்ளே எந்த ஒளியானது தோன்றுகிறதோ அந்த பிரகாசத்துக்குக் காரணம் ஆத்மஜ்யோதிஸ் அது எப்போதும் ஸ்வயம்பிரகாசமாக இருக்கிறது. இதனுல்தான் 'அஹம்' என்ற பதத்திற்கு அக்ஞானம் நீங்கின முமுக்ஷுவின் நிலை என்று சொல்லப்பட்டது.

குறிப்பு:— இந்த தத்துவம் உபநிஷத்தில் ஜனக யாக்ஞவல்க்ய ஸம்வாதமாக உள்ளதை பகவத்பாதாள் 'ஏகச்லோகி'யில் உபதேசிக்கிருர்.

கேள்வி: (உபநிஷத்தில் ஜனகர் யாக்ஞவல்க்யரை இதே மாதிரி கேட்கிருர்) ஆத்மாவின் ஜ்யோதிஸ்ஸினுல்தான் உள் பிரகாசம் தோன்றுகிறதுஎன்று சொல்லப்பட்டதே அது எந்த அம்சத்தைக் குறிப்பது?

பதில்: (யாக்ஞவல்க்யர் சொன்ன பதில்) மனதிற்கு அப்பால்பட்டதும் விஜ்ஞானமயமுமான ஆத்மாவையே குறித்து சொல்லப்பட்டது.

கேள்வி: "நான் பிரும்மம்" என்று சொல்லும்போது "நான்" என்ற வாக்யத்தை "பிரும்மம்" என்றல்லவா அர்த்தம் பண்ணவேண்டும். இதெப்படி முடியும். நம்முடைய குறைவான அந்தக்கரணத்தின் சக்தியால் (அஹம் என்றதால்) அத்துவிதீயமான பிரும்மத்தை எப்படி அறிய முடியும்.

பதில்: இதை அறியும் முமுக்ஷுவுக்கு அந்த நிலையில் 'நான்' என்கிற அஹங்காரமே அப்போது நாசமாகி விடுகிறது. ஆகையால் அந்த நிலையில் தோன்றும் (அஹம்)

'நான்' என்ற பதத்திற்கு இப்போது நாம் கொடுக்கும் அர்த்தம் இல்லை.

'நான்' என்ற பதத்திற்கு அர்த்தம் தெரிந்துகொண்டவனும் 'நானே பிரும்மம்' என்ற வாக்கியத்தில் வாஸ்தவமான அர்த்தத்தைத் தெரிந்துகொள்ள முடியாது. ஏனெனில் இரண்டிற்கும் ஒன்றுக்கொன்று விரோதமான அர்த்தம் உள்ளது எப்படியெனில் பிரத்யக்ஷமாகப் பார்த்து தெரிந்து கொள்வதற்கும், வாக்கியம் தெரிவிக்கவந்த லக்ஷ்யமான தத்துவத்துக்கும் வித்தியாஸம் இருக்கிறதல்லவா. நாம் ஒரு வரம்புக்குட்பட்டவர்கள், துக்கமுடையவர்கள் என்பதை அறிவோம். வேதம் நம்மையே, எல்லையற்ற ஒப்பிட முடியாத ஆனந்தமயம் என்று சொல்லுகிறது. இது விரோதமல்லவா ?

இந்த சந்தேகம் தவறுனது 'நான்' என்று சொல்லப் படுவது எது என்று விசாரணை செய்து தெரிந்துகொண்ட பின்பு வேதவாக்யமான "நான் பிரும்மம்" (அஹம் பிரும்ம அஸ்மி) என்ற வாக்கியத்தின் அர்த்தம் தெரிந்து கொள்ளாமல் இருக்கமுடியாது. நாம் காண்பதற்கும் தத்துவ விளக்கத்துக்கும் விரோதமே கிடையாது. இந்த இரண்டும் ஒரே வஸ்துவைக் குறித்து சொல்லாது. பார்வையினுல் வெளித்தோற்றத்துக்குக் கட்டுப்பட்டதுதான் விளங்கும். இது அனுத்மாவை சேர்ந்தது. வேதவாக்கியமோ என்ருல் இதற்கு அதீதமான (உள்நோக்கில் உணரவேண்டியதான) ஆத்மாவைக்குறிக்கிறது.

எண்ணுபவன், எண்ணம், எண்ணப்படும் வஸ்து இந்த மூன்று மயமான இந்த உலகமும் மாறுதல் அற்றதும் சாசுவதமானதும் எல்லாவற்றையும் சாக்ஷியாக இருந்து பார்ப்பதுமான ஆத்மாவும் வெவ்வேறு என்று வித்யாசப்படுத்திக் கொள்ளவேண்டும். அந்த ஆத்மாவைத்தான் வேதம் 'தத்துவமஸி' என்றபோது குறித்தது என்று அறிந்து கொள்ளவேண்டும். நம்முடைய சுகமும் துக்கமும் மாறுதல்

அடையக்கூடியவையே. இவைகளுக்கு மீறி (இவைகளுக்கு அப்பால்) எது இருக்கிறதோ (தோன்றுகிறதோ) அதுதான் அறிவுமயம், ஸர்வேசுவரன், ஆனந்தமயம் என்று அனுபவிக்கவேண்டும். இதுதான் சுருதியின் தாத்பர்யம்.

சிலர் ஆக்ஷேபிக்கிறார்கள்: 'தத்த்வமஸி' என்ற வேத வாக்கியம் ஏதோ இருத்தல் என்பதை குறிக்கிறதே தவிற அதனாலேயே அதில் சொல்லப்பட்டது வாஸ்தவம் என்று சொல்லிவிடமுடியாது அவைகளின் சொல்லிலிருந்துமட்டும் அப்படித்தான் இருக்கிறது என்று ஒப்புக்கொள்ளமுடியாது இதை நிருபிக்க வேறு தனிப்பட்ட சில ருஜுக்கள் தேவை என்று.

உதாஹரணமாக 'நதிக்கரையின் பேரில் பழங்கள் இருக்கின்றன' என்ற வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத்தில் அங்கு பழங்கள் இருக்கிறது என்று நம்பமுடியாது. யாராவது ஒருவன் போய் தன் கண்ணினால் பார்த்து வந்தால்தான் அதை நம்பலாம். ஆகையால் வேத வாக்கியங்களை (தத்துவமஸி) கட்டளைகள் என்று எடுத்துக் கொள்ளவேண்டும். அப்போது அவைகளை ருஜு செய்ய வேறு அம்சங்கள் தேவை இல்லை.

பதில்: ஒரு வாக்கியத்தின் அர்த்தத்தை நிருபிப்பதற்கு வேறு பிரமாணங்கள் எப்போது உபயோகமாகும். வேறு பிரமாணங்களினால் அந்த வஸ்து அறியப்படக்கூடியதா யிருந்தால்தான். ஆனால் வேதவாக்கியமோ வாக்குக்கும் மனதுக்கும் எண்ணத்துக்கும் அது சம்பந்தமான அறிவிற்கும் மீறின ஆத்மாவையன்றோ குறிக்கிறது. தவிற அந்த வஸ்துவைத் தன்னந்தானாகவே அறிந்துகொள்ளமுடியாமல் சந்தேகமுள்ளதாய் வேறு வஸ்துவினால்தான் அறியமுடியும் என்றாலல்லவா அந்தக்கேள்வி பிறக்கும். இந்த ஆத்மாவோ வேறொன்றால் அறிவிக்கப்படும் வஸ்துவல்ல. வேறொன்றினால் அறியப்படும் குணம் ஆத்மாவில் கிடையாதே.

மேலும் புதிதாக பிரமாணங்களால் நிரூபிக்கப்பட வேண்டும் என்று எண்ணும்போது அதற்கு செய்கை தேவை, செய்கைக்கு ஆசை தேவை. ஆத்மா நமக்குள்ளேயே இருப்பதால் அது எங்கோ வெளியில் இருப்பதுபோல் அதற்கு ஆசைப்பட்டு காரியத்தை செய்வதுபோல் ஆவதில்லை. ஆத்மா வேறொன்றால் அறியப்படக்கூடிய வஸ்துவல்ல.

ஆத்மா பார்க்கப்பட முடியாதது, அளவிடப்பட முடியாதது, இந்திரியங்களுக்கு லக்ஷ்யமாக முடியாது. பிரத்யக்ஷ அறிவிற்கு விஷயமாகாது. தேசம், இடம் காலம் முதலியவைகளை மீறியது. ரூபமற்றது. ஸ்வயம் பிரகாச மானது. ஆகையால்தான் வேதம் "பார்க்கும் சக்தியைப் பார்ப்பவனை நாம் பார்க்கமுடியாது" என்றது.

அனுமானத்தாலும் ஆத்மாவைக் காணமுடியாது. அனுமானம் சித்திக்க வேணுமானால் ஊகிக்கப்படும் வஸ்து வுக்கும் ஊகத்துக்குக் காரணமான வஸ்துவுக்கும் சம்பந்தம் நேரிடையாக இருக்கவேண்டும் அப்படியான நேரிடைப் பார்வை வெளியில் உள்ள தனிப்பட்ட வஸ்துவைப் பொருத்துத்தான் முடியும். ஆத்மாவைப்பொருத்து இவ்வித ஊகங்கள் செய்யமுடியாது.

பிரத்யக்ஷம், அனுமானம் முதலிய பிரமாணங்களினால் வரும் அறிவு ஆத்மாவுக்கு வெளியான வஸ்துக்களைப் பொருத்தது. அவைகளைப் பொருத்துத்தான் அறியவேண்டும் என்ற எண்ணம் ஏற்படும். ஆகவே, இதர அறியும் கருவி யோ காரணங்களோ, இல்லாமலேயே தானாகவே ஆத்மாவைப் பற்றிய இரண்டற்ற நிலை விளங்கக்கூடியது.

இருத்தல் இல்லாமை என்று மேலே சொல்லப்பட்ட சோதனைகளால் சரீரம், இந்திரியங்கள், பிராணவாயு இவை கள் ஆத்மாவல்ல என்று தெரிந்தபின் நமக்குள் "நான் யார்" என்ற கேள்வி பிறக்கிறது. அப்போது வேதம் சொல்லுகிறது, "தத்துவமஸி" "நீ அது (ஆத்மா) ஆகிறாய்" என்று.

ஆத்மாவுக்கும் அனுத்மாவுக்கும் வித்யாஸம் நன்கு அறிந்தவனுக்கு 'தத்துவமஸி' என்ற வேதவாக்கியத்தின் கருத்து தெளிவாய் விளங்கும்.

மேலே சொன்னபடி அவனுக்கு நம்முடைய சரீரமும் மற்ற வஸ்துக்களைப்போலுள்ளது. இந்திரியங்களும் அவ்விதமே. மனது, அந்தக்கரணம் எல்லாமும் அப்படியேதான். இவைகள் அறியப்படக்கூடியவை. ஆகவே இவைகள் அறிபவனைவிட வேருனவை. எவைகள் உண்டாகின்றனவோ, இருக்கின்றனவோ, நாசத்தையோ மாறுபாட்டையோ அடைகின்றனவோ அவை எல்லாம் அனுத்மாவே. இப்படி மாறிக்கொண்டுவரும் வஸ்துக்களின் ஆரம்பத்தையும் முடிவையும் அறியும் சாக்ஷியானவர் தனக்கு எவ்வித மாறுதலுமில்லாமல் இதர வஸ்துக்களினின்றும் வேறுபட்டதாகவும் இருப்பவராவர்.

உலகத்தில் இந்திரியங்களுக்கு லக்ஷ்யமான எல்லாப் பொருள்களும் அனுத்மா தான். ஏனெனில் அவைகள் இந்திரியங்களால் அறியப்படுகின்றன (காணப்படுகின்றன) அதனுல் காண்பவரைவிட வேருனவை. இவைகள் வந்து கொண்டும் போய்க்கொண்டும் இருக்கின்றன. இவைகளின் வருகையையும் போவதையும் பார்ப்பவர் வேறு. 'நான்' என்ற அகங்காரமும் ஆத்மாவும் ஒன்ருகாது. ஏனெனி[illegible]
க்ஷியின் பார்வைக்குட்பட்டதா[illegible]
[illegible]ருனை[illegible] றது.

'நான்' என்று சொல்லும்போது இந்த சரீரத்துக்கு வெளியில் இருக்கப்பட்ட வஸ்துக்களிலிருந்தும் அதைப் பிரித்து குறிப்பிடுகிரேம். (பஞ்சகோச லக்ஷணங்களைக் கொண்டு பிரித்து பார்க்கும்போது) உடல், இந்திரியங்கள் இரண்டில் இந்திரியங்கள் சூக்ஷ்மமானவை. நான் என்று சொல்லும்போது உடலை விட்டு இந்திரியங்களை குறிக்கிரேம். அதிலிருந்தும் சூக்ஷ்மமாய் பார்க்கும்போது மனசு என்று குறிக்கிரேம். ஆகவே இப்படி பரிசீலனை செய்வது

ஞல் மனிதனின் அகங்காரம் (நான் என்பது) ஓரளவு ஆத்மாவைத் தேடிக்கொடுக்கிறது.

அனுமானத்திஞலேயே ஆத்மா அறியப் படலாமே. வஸ்துக்கள் அறியப்படுவதால் அவைகளை அறியும் வஸ்து ஒன்று உண்டு என்று அனுமானம் செய்யலாம். விழிப்பு, ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மாறுதல் களை நாம் காண்பதஞல் இவைகளுக்கு சாக்ஷியாக இருக்கும் மாறுதல் இல்லாத ஒரு சைதன்யம் இருக்கவேணும் என்று ஊகித்துக் கொள்ளலாமே. இப்படி ஆத்மா அறியப் படுமாகில் வேதத்தின் மொழி எதற்காகத் தேவை. (சாங்க்யர்களின் மதம்)

பதில்: விடுதலைபெற (மோக்ஷம் அடைய) தேவையான ஞானம் பிரத்யக்ஷமாயும் உடனடியாக ஏற்படுவதாயும் இருக்கவேணும். அனுமானத்திஞல் அப்படிப்பட்ட ஞானம் உண்டாகாது. ஆகவே வேதம் அவசியம் சொல்லவேண்டி

வேருென்றின் உதவி இல்லாமலேயே அனுமானத்திஞல் மாத்திரம் அறியமுடிகிறதே. ஏனெனில், மாறுதல் உள்ளவைகளை அறியும் வஸ்து நேரடியாக வேருென்றின் உதவி இல்லாமல் தானே அறிகிறது. ஆகவே இதற்கு மேலாக வேதம் எதைத்தெரிவிக்கவேண்டும்?

பதில்: அனுமானத்திஞல் ஏற்படும் ஞானம் எப்போதும் பொதுப்படையானதேதான். குறிப்பாயுள்ளதும் ஒப்பற்ற தாயும் உள்ள வஸ்துவின் உண்மை ஸ்வரூபம் ஊஹத்திஞல் ஏற்பட முடியாது. அனுமானத்திஞல் ஸ்வயம்பிரகாசமா யுள்ள ஆத்மா என்பது ஒன்று உண்டு என்றுதான் தெரியலாம். ஆஞல் சந்தேகமில்லாமல் ஆத்மாவின் ஸ்வப்ரகாசஸ்திதியின் ஸ்வானுபூதி வேத வாக்கியத்திஞல் தான் ஏற்படும்,

நம்முடைய ஊனக்கண்ணினாலேயும் அனுமானத்தினாலேயும் கிடைக்கும் ஞானம் பொது அறிவுதான். அதாவது எல்லா வஸ்துக்களிலும் சேர்ந்தது ஒரு வஸ்து என்ற சாமான்ய அறிவுதான் அனுமானத்தால் கிடைக்கும். இதனால் அதன் ஒப்பற்ற (ஒற்றையான) நிலை தெரியாது. ஆத்மாவின் நிரதிசயமானதும், மனதின் எண்ணங்களுக்கு மீறினதாயுமுள்ள ஞானம்தான் முக்தி பெறுவதற்கு தேவையானது வேதவாக்கியத்தால்தான் ஸாக்ஷாத் பிரதிபத்தி உண்டாகிறது. 'எந்த ஆத்மாவை அடைவதற்கு யத்னம் செய்கிறானோ அதனுடைய அனுகிரகத்தால் அதை அடைகிறான்' என்று வேதம் சொல்லுகிறது.

கேள்வி: தீர்க்க நித்திரையின்போது மனதின் விருத்தி அடங்கிவிடுகிறதல்லவா. விருத்திக்கு மீறின அறிவு அப்போது இருக்கிறதே. வேதவாக்கியத்தினால் என்ன அதிகப்பலன்.

தீர்க்க நித்திரையிலும் அக்ஞானம் அழிவதில்லையே. அழியுமாகில் தூங்கியதும் எல்லோரும் முக்தர்களாகிவிடுவார்களே. ஒருவரும் எழுந்திருக்கவே மாட்டார்கள். தூங்கும்போதும் முன்இருந்த மனிதனே தான் இருக்கிறான் வேறொருவன் அங்கு தோன்றுவதில்லையே. ஏனெனில் விழித்து எழுந்தவுடன் அவன் தானே தூங்கி விழித்தவன் என்றல்லவா அறிகிறான். ஆகவே அப்போதும் அக்ஞானம் இருக்கிறது என்று தீர்மானம். இதற்கும் விழிப்புக்கும் ஒரு வித்தியாஸம் இருக்கிறது. விழிப்பில் ஒரு வஸ்துவைக் காணாவிடில் அது தெரியவில்லை என்று உணர்கிறான். தூங்கிக்கொண்டிருக்கும்போது இப்படிப்பட்ட 'தெரியவில்லை' என்ற எண்ணம் வருவதில்லை. தூக்கத்தில் மனம் வேலை செய்யாமல் இருப்பதே இதற்குக்காரணம். மனதின் வேலையினால் தான் 'நான்' என்ற அஹங்காரம் தோன்றுகிறது. மனது வேலை செய்யாவிடில் இந்தத் தோற்றமே கிடையாது.

அஹங்காரம் (நான்) என்பது ஆத்மாவை ஓர் அளவு அறிவிக்கிறது என்று முன் சொல்லப்பட்டதே. அதுவும் சரி இல்லையே. அப்போது ஆத்மாவுக்கும் அந்தக் கரணத்துக்கும் வித்யாஸம் தெரிவதில்லையே ஒரு புஸ்தகம் அதைப்பார்ப்பவன் இவை இரண்டும் வெவ்வேறானது என்று உணர்கிறோம். இப்படிப்பட்ட வேறுபட்ட உணர்ச்சி அந்தக்கரணத்துக்கும் ஆத்மாவுக்கும் இடையே தோன்றுவதில்லையே 'நான் இதைப்பார்க்கிறேன்' என்னும்போது அந்தக்கரணமே பார்க்கிறதுபோல் தானே அர்த்தமாகிறது.

அந்தக்கரணம் தானாகவே அறிவதில்லை. அறிவதுபோல் தோற்றம் ஏற்படுகிறது. அதனால் இதை ஆத்மாவுடன் சேர்த்துக்கொண்டு கஷ்டப்படுகிறோம். அந்தக்கரணம் அறிவதாகவும் அறியப்படுவதாயும் எண்ணுகிறோம். ஒரு கட்டை எரியும்போது அது எரிப்பதாயும் எரிக்கப்படுவதாயும் எண்ணுகிறோம். இது தவறு. ஒரு கட்டை எரியும்போது அதில் உள்ள அக்னிதான் எரிகிறது. கட்டை எரிக்கப்படுகிறது. அஹங்காரத்துக்கு (நான் என்பவனுக்கு) சுகதுக்கங்கள் உள்ளதால் அறியப்படும் வஸ்துவாகத்தான் இருக்கமுடியுமே தவிர அறியும் நபராக இருக்கமுடியாது.

அந்தக்கரணம் என்பது அறியப்படும் வஸ்து என்றால், என்னுடைய அந்தக்கரணம் அறிகிறது என்று அல்லவா சொல்லவேணும். 'நான் அறிகிறேன்' என்று அறிபவன் என்ற ரீதியில் அல்லவா பேசுகிறோம். வெளி வஸ்துவைக் குறித்துப் பேசும்போது 'இது, என்னுடையது' என்ற பதங்களை உபயோகிப்பது வழக்கம்.

பதில்: இதற்கு விளக்கம் தெரிவதற்குமுன் சில விவரங்கள் தெரியவேண்டும். அந்தக்கரணத்துக்கும் உலகத்துக்கும் என்ன சம்பந்தம்? அந்தக்கரணத்துக்கும் ஆத்மாவுக்கும் என்ன சம்பந்தம்?

ஆத்ம சைதன்யம் (பிரகாசம்) அந்தக்கரணத்தில் படும்பொழுது ஏற்படும் அறிவு 'நான்' என்று தோற்றம் கொள்கிறது. வெளிவஸ்துவை மனது அறியும்போது மனதின் விருத்தி (அலை) பார்க்கப்படும் வஸ்துவின் ரூபத்தை அடைகிறது. அப்போதுதான் அந்த வஸ்துவைப் பற்றி மனது அறிகிறது என்பதாகும். ஒவ்வொரு சரீரத்திலும் உள்ள அந்தக்கரணம் தனித்தனியானது. ஆகவே அந்தந்த மனோவிருத்தியும் அதன் மூலம் ஏற்படும் அறிவும் வெவ்வேறானதே.

ஆத்மாவுக்கும் அந்தக்கரணத்துக்கும் அறிபவன், அறியப்படுவது என்ற ஸம்பந்தம்தான். ஆத்மா அக்ஞானத்தினால் அந்தக்கரணத்துடன் கலந்து ஜீவனாகக்காணப்படும் போது அஹங்காரஸம்பந்தமாகி (நானாகி) வெளியில் உள்ள வஸ்துக்களின் சம்பந்தத்தால் நல்லதாகவோ கெட்டதாகவோ பாதிக்கப்பட்டவனாகக் காணப்படுகிறான்.

அறிபவன் அறியப்படும்பொருள் என்ற சம்பந்தம் ஏற்படும்போது 'இது' என்ற தோற்றத்துக்கு இடம் ஏற்படும். இதற்குமேல் உலகில் உள்ள வஸ்துக்களால் நமக்கு அனுகூலமாகவோ பிரதிகூலமாகவோ இணைப்பு ஏற்பட்டால் "என்னுடையது" என்று சொல்லும் நிலை வரும். வெளி வஸ்துவை அறிந்தவுடன் 'இது' என்றும் உள் இணைப்பில் ஏற்படும் அறிவால் 'என்னுடையது' என்றும் பதங்களை உபயோகிக்கிறோம். அந்தக்கரணம் ஆத்மாவைப் பொருத்து அறியப்படும் வஸ்துவாதலால் 'இது' என்று குறிப்பிடமுடியும். ஆனால் ஆத்மாவின்பேரில் அந்தக்கரணம் எவ்வித மாறுதலையும் செய்விக்கமுடியாது ஆகையால் "என்னுடையது" என்று ஆத்மாவிடத்தில் இதை சொல்லமுடியாது.

ஒரு வஸ்துவால் தனக்கு நன்மையோ தீமையோ வந்தால்தான் 'என்னுடையது' என்ற பதத்துக்கு இடம் உண்டு. இல்லாவிடில் அதை 'இது' என்ற பதத்தால்தான்

சொல்லலாம். சாமான்ய ஞானம் மட்டும் இருக்கும்போது 'இது' என்றும் அதனால் மாறுதல் ஏற்படும்போது 'என்னுடையது' என்றும் சொல்லப்படுகிறது. அந்தக் க த்தினால் ஆத்மாவுக்கு மாறுதல் ஏற்படாதாகையால் 'என்னுடையது' என்ற சம்பந்தம் வராது. அக்ஞானம் இருப்பதால் எதிரில் தோன்றுவதுபோல் 'இது' என்பதால் குறிப்பிடலாம். தூக்கத்தில் அக்ஞானத்தால் ஏற்படும் மாறுதல்கள் இல்லாததால் 'இது' 'என்னுடைய' என்ற அறிவு அப்போது ஏற்படுவதில்லை. விழித்தபின்தான் 'எனக்குத் தெரியாது' என்ற அக்ஞானத்தை உணர்கிறான்.

உலகத்தைத் தவிர ஆத்மா வேறுபட்டது என்று அறிந்தால் ஆத்ம அனாத்ம ஞானம் நன்கு விளங்குகிறது. இது வேத வாக்கியத்தினால்தான் ஏற்படும். ஆகவே 'தத்துவமஸி' போன்ற வேத வாக்கியங்கள் தேவையில்லை என்று சொல்லக்கூடாது. ஏனெனில் அவைகளில்தான் மூல அக்ஞானம் நிவர்த்தியாகும்.

முக்தியை அடைவதற்கு ஒவ்வொருவரும் அடிக்கடி வேதவாக்கியத்தைக் கேட்டுக்கொண்டே இருக்க வேண்டும் என்பதில்லை. அல்லது ஒரு தடவைகூட கேட்க வேண்டும் என்ற நிபந்தனையும் இல்லை. கேட்பவர்களில் பலவித சக்தி வாய்ந்தவர்கள் உண்டு. ஒருவன் தன் அறிவினால் உலகத்தைவிட்டு தன்னை விலக்கான ஆத்ம ஸ்வரூபம் என்ற அனுபவம் அடைந்துவிடலாம் இவனுக்கு வேதவாக்யம் தேவையே இல்லை. எல்லா கஷ்டங்களுக்கும் மூலகாரணம் நீங்கிவிட்டதால் சுருதியில்கூட இவனுக்கு உபதேசிக்கவேண்டியது ஏதும் இல்லை. மற்றொருவன் வேத வாக்கியத்தைக்கேட்ட மாத்திரத்திலேயே உண்மையை உணர்ந்துவிடுகிறான். விசேஷமான சக்தியுடைய இவனுக்கும் வேதவாக்கிய உபதேசம் தேவையில்லை. இன்னும் ஒருவன் தத்துவமஸி என்ற வாக்கியத்தைக் கேட்டதும் உடனடியாக தான் ஆத்மஸ்வரூபம், உலகம் அனாத்ம ஸ்வரூபம்

என்ற அறிவுடையவனுக ஆகிருன். இவன் சரியாக விஷயங்களை அறிந்தவனுகிறபடியால் இவனையும்பற்றி கவலைப்படவேண்டியது இல்லை. ஆனுல் யார் ஒருவனுக்கு ஆத்மா அனுத்மா என்ற வித்யாஸத்தைப்பற்றித் தெரிந்திருந்தும் அடிக்கடி தத்துவமஸி என்ற வாக்கியத்தின் உபதேசம் சொல்லப்படுகிறதோ அவன் விஷயம் என்ன? அதாவது ஏற்கனவே தன் சுய அறிவினுல் ஞானம் வராமல் இருப்பவனுக்கு வேதவாக்கியத்தால் என்ன பயன் கிடைக்கும்?

பதில்: உதாரணம்—காட்டில் சமித்து தேடச்சென்ற 10 பேர்கள் பிரிந்து கொஞ்சநேரம் சென்று சேர்ந்தார்கள் வந்தவர்களின் எண்ணிக்கை சரியா, எல்லோரும் வந்து விட்டோமா என்று அறிய ஒவ்வொருவரும் எண்ணிப் பார்த்தார்கள். ஆனுல் தன்னை விட்டு எண்ணினுன். 10வது நபரைக் காணவில்லை என்று ஒவ்வொருவரும் சொல்ல அங்குவந்த வழிப்போக்கன் இவர்களை நிறுத்தி எண்ணிக் காட்டி 'அந்த 10வது பேர்வழி நீயே' என்று எண்ணியவனிடம் சொல்ல சரியான அறிவு ஏற்பட்டது. அது போலவே சுருதி வாக்கியமும் உபயோகமாகிறது.

அதுபோலவே உலகத்தைக் காணும்போது இரண்டு வஸ்து உண்டு என்ற எண்ணம் ஏற்பட்டு நாம் அதில் மயக்கம் அடைகிருேம். ஆகவே அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாலன்றி தத்துவமஸியின் உண்மையை அறியமாட்டோம். இதற்கு காரணம் அக்ஞானம். ஸ்வயம் பிரகாசமான ஆத்மாவிடம் எப்படி இந்த அக்ஞானம் வந்தது என்பதை இதைவிட விளக்கமுடியாது.

அக்ஞானத்தின் ஸ்வரூபத்தைப்பற்றி விசாரிக்கவோ விளங்கச் செய்யவோ முடியாது. உலகத்தில் உள்ள வஸ்துக்கள் எல்லாவற்றிற்கும் ஒரு இருப்பு நிலையும் சில கட்டு திட்டத்துக்குட்பட்ட நிலையும் உண்டு. அதனுல் தான் அதை அறிகிருேம். ஆனுல் அக்ஞானம் அப்படிப்

பட்ட வஸ்துவல்ல. இதற்கு ஒரு நிலை, சட்டம் என்பது

இருட்டு என்ன என்று விசாரிக்க வெளிச்சத்தைக் கொண்டு வந்தால் அது எப்படி சகிக்காமல் ஓடிவிடுமோ அப்படியே அச்ஞானத்தை விசாரிக்கப் புகுவோமாகில்

அக்ஞானமும் அதன் விளைவுகளும் ஞானத்தினால்தான் நீங்கும். உலகில் உள்ள மாயைக்குக் காரணம் அக்ஞானம், இது ஆத்மாவைப்பொருத்து ஏற்பட்டிருப்பதால் பிரத்யக்ஷம், அனுமானம் முதலியவைகளின் உதவியால் இதை விலக்க முடியாது. ஆத்மாவை பிரத்யக்ஷம், அனுமானம் முதலிய பிரமாணங்களினால் அளவிடமுடியாது. இந்த மூல அக்ஞானத்துக்கு வேதவாக்கியத்தினால்தான் நிவர்த்தி ஏற்படும்.

முன்சொன்ன உதாஹரணத்தில் பத்தாவது பேர்வழியைக் காணவில்லை என்று தவித்துக்கொண்டிருந்தவனிடம் 'நீதான் அந்த 10வது நபர்' என்றவுடன் சந்தேகமும், துக்கமும், நீங்குவதுபோல் ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிய ஆவலுடன் இருப்பவனிடம் வேதம் 'நீயே அந்த ஆத்மா' என்று சொன்னால் அவனுக்கு அக்ஞானம் நீங்கும்.

10வது மனிதனாக இருந்துகொண்டு எண்ணும் மனிதனுக்கு முன்புநிற்கும் 9 நபர்கள் எப்போதும் இருக்கிறார்கள். வழிப்போக்கன் சுட்டிக்காட்டி 'நீதான் 10வது நபர்' என்று சொல்லி சந்தேகம் நிவர்த்தியான பின்பும் அந்த 9 பேர்வழிகளின் இருத்தலில் பொய் கிடையாது. ஆனால் ஆத்ம விசாரத்தில் 'தத்துவமஸி' என்ற வாக்கியத்தின் அர்த்தம் அனுபவத்துக்கு வந்ததும் அதற்கு முன்பு ஸத்யமாகத்தோன்றிய உலகமே இல்லை என்ற நிலை வந்துவிடுகிறதே. ஆகவே இந்த அறிவு சரியானது என்று எப்படிச் சொல்வது.

முன் இருந்த துவைத பாவத்தைப் போக்கித் தான் இந்த அத்துவைத பாவம் விளங்குகிறது. ஆகவே முன் இருந்த நிலையுடன் இதை ஒப்பிடவோ, மறுக்கவோ, இடமில்லை. பின்னிட்டு அக்தவிதமான தப்பு அறிவே ஏற்படுவதில்லை. 'தத்துவமஸி' என்ற வேதவாக்கியத்தை கேட்டவனெல்லாம் கேட்டவுடனே ஞானியாவது கிடையாது. ஆத்ம அனுத்ம விவேகம் ஏற்கனவே உடையவனுக்கே இந்த ஞானம் உண்டாகும்.

இந்த அத்வைத ஞானத்தின் ஸ்வரூபம் என்ன? செய்கை, அதன் பலன் முதலியவைகள் இருக்கின்றனவா, நாசம் அடைந்து விடுகின்றனவா? இருக்கின்றன என்று சொன்னுல் அத்துவைதம் இல்லை. பொய்த் தோற்றமான இவைகள் நாசமடைந்தால் ஒழிய ஆத்ம ஞானம் உண்டாவதில்லை. ஆத்மாவைப்பற்றி யோசிக்கும்போது மேலே சொன்ன குணங்கள் அற்றது என்று தெரிகிறது. அப்படி இருந்தும் இந்த ஆத்மாவுக்கு செய்பவன், செய்கை, பலன் இவைகளுடன் சம்பந்தம் உள்ளதுபோல் காணப்படுகிறதே என்ருல், அதற்கு காரணம், அந்தக்கரணத்தில் ஆத்மாவின் சித்பிரதிபையினுல் தோன்றும் வஸ்து ஞானத்தை ஆத்மாவினுடையது என்னும் பிரமையேயாம்.

அந்தக்கரணத்துக்குள்ள இந்த சிதாபாஸ லக்ஷணத்தால் படித்தவர்கள்கூட அநேக சமயங்களில் இதை ஆத்மா என்று பிராந்தி அடைந்தவர்களாகிருர்கள். ஆனுல் சிரமமாக இந்த பிராந்தியும் மாறிவிடும்.

கேள்வி: அப்படியானுல் வேதத்தில் ஜீவனைப்பற்றிச் சொல்லும்போது காரியத்தை செய்பவன், சாப்பிடுபவன் பார்ப்பவன், கேட்பவன் என்ற பதங்களை உபயோகித்து ஆத்மாவுக்கு கிரியை உண்டு என்பது போல ஏன் சொல்லுகிறது?

பதில்: நமக்கு விஷயத்தை நன்ருக விளங்க வைப்பதற்காகவேதான். நமக்கு இருக்கும் அக்ஞானத்தால்

சரீரத்தின் தர்மத்தையும் மனதின் தர்மத்தையும் ஆத்மாவி னுடையதாக அதன் பேரில் சுமத்துகிறோம். அதை சுட்டிக்காட்டித்தான் தவறுதலை நிவர்த்திக்கவேணும். உதாஹரணமாக கட்டையைப்பார்த்து மனிதன் என்று பயப்படுகிறான். அது கட்டை என்று சொன்னால் அவனுக்கு விளக்கம் உண்டாகாது. புருஷனாகத் தோன்றியது கட்டையே என்று பூர்வத்தில் உண்டான தப்பு அறிவுடன் சேர்த்துச் சொன்னால் தான் விளங்கும். அதேமாதிரிதான் இங்கும். அக்ஞானத்தினால் அனுபவிக்கிறது என்று எந்த ஜீவனை நினைத்தாயோ அதேதான் ஆத்மா என்று நிரூபிக்கிறது.

'தத்துவமஸி' என்ற வாக்கியத்தில் 'துவம்' (நீ) என்ற பதம் துக்கத்துடன் கஷ்டப்படும் ஜீவனைத்தான் குறிப்பிடுவதாய் அறிகிறோம். ஏனெனில் கேட்பவனுக்கு அந்த அர்த்தம்தான் மனதில் தோன்றும். ஆனால் இது விசேஷ அர்த்தமில்லாத சாமான்யமாக உலகில் அறிவின்மையுடன் பேசும் தாத்பரியமேதவிற ஆராய்ச்சி யின்பேரில் ஏற்பட்ட அர்த்தமில்லை. ஒரே வஸ்துவைக் குறித்து விரோத அர்த்தமுள்ள இரண்டு பதங்களை உபயோகித்தால் ஒன்றுக்கொன்று முறண் உண்டு. ஆனால் வித்தியாஸமான அர்த்தமுள்ள இரண்டு பதங்களை ஒன்று மற்றொன்றுக்கு அனுகுணமானது என்ற அர்த்தத்தில் உபயோகித்தால் அது முறண் ஆகமாட்டாது. விளக்கிச் சொல்லுங்கால், 'தத்துவமஸி' என்ற வாக்கியத்தில் உள்ள 'தத்' 'துவம்' என்ற இரண்டு பதங்களும் அவைகளின் சாமான்ய அர்த்தத்தில் சொல்லப்படவில்லை. அவைகளுக்கு சாமான்ய அர்த்தத்தில் உள்ள சில அம்சங்களை விட்டு விட்டுத்தான் அர்த்தம் செய்யவேண்டும். உதாஹரணமாக, 'துவம்' (நீ) என்ற ஜீவாத்மாவைக் குறிக்கும் பதம் சாமான்யமாக பல ஜீவராசிகளுள் ஒன்று, துக்கத்துக்குட் பட்டது என்றுதான் அர்த்தமாகும். அதேபோல் 'தத்' (பரமாத்மா) என்ற பதம் பிரத்யக்ஷமில்லாத எங்கோ உள்ள

வஸ்துவைக் குறிப்பதுபோல்தான் அர்த்தமுடையது. 'தத்துவமஸி' என்ற வாக்கியத்துக்கு விளக்கம் சொல்லும்போது 'துவம்' பதத்தில் உள்ள கஷ்டப்படும் தன்மை, குறுகிய அளவுக்குக் கட்டுப்பட்ட தன்மை இவைகளை நீக்கியும் 'தத்' என்ற பதத்தை ஒட்டிய பிரத்யக்ஷமின்மை என்ற அர்த்தத்தையும் நீக்கிவிட்டு இந்த வாக்கியத்துக்கு அத்துவிதீயமான (ஒன்றான) பிரத்யக்ஷமானது இதுவே பிரும்மம் என்று அர்த்தம் கொள்ளவேண்டியது.

ஆகவே வாக்கியத்தில் "துவம்" என்பது க்ரியாபதமாகாததால் இதில் முறண்ன அர்த்தத்துக்கு இடமில்லை. உலகில் உள்ளவர்கள் அறியக்கூடிய வழியில் சாமான்ய பதமாக உபயோகப்படுத்தி இருக்கிறது இந்த பதத்தில் அர்த்தத்தில் "துவம்" பதத்தால் அறிவிக்கப்படும் துக்கானுபவத்துக்குட்பட்டது என்ற அர்த்தத்தில் உபயோகப்படுத்தப்படவில்லை என்று எண்ணிக்கொள்ள வேணும். இந்த இரண்டு பதங்களில் தள்ளவேண்டிய அர்த்தங்களுக்கு ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லை.

இவ்விரண்டுக்கும் சம்பந்தம் இல்லாமல் இருக்கமுடியுமா. நீலோத்பலம் என்ற பதத்தில் "நீலம்" "உத்பலம்" இவ்விரண்டிற்கும் உள்ள நெருங்கிய சம்பந்தம் போல் இருக்குமல்லவா ?

பதில் : அப்படி இல்லை இரண்டு பதங்களில் ஒவ்வொன்றிற்கும் தனியாக அர்த்தம் இருந்தால்தான் சம்பந்தம் ஏற்படும். அதாவது "நீலோத்பலம்" என்றதில் "நீலத்துக்கும்" "உத்பலத்துக்கும்" சம்பந்தம் இருப்பதற்கு காரணம் நீலமில்லாத தாமரை இருக்கலாம், தாமரையில் சம்பந்தப்படாத நீலவர்ணம் இருக்கலாம் என்ற காரணத்தால்தான். இங்கு அப்படி அல்ல. 'தத்' 'துவம்' இரண்டுமே அத்துவிதீயமான பிரும்மத்தையே குறிக்கின்றன. ஜீவாத்மா அல்லாத பரமாத்மாவோ, அல்லது பரமாத்மா அல்லாத ஜீவாத்மாவோ கிடையாது.

பதங்களின் அர்த்தத்தில் எந்த அம்சத்தை விட்டுவிட்டு எந்த அம்சத்தை ஏற்றுக்கொள்கிறோம் என்று பார்ப்போம். 'துவம்' என்பது ஜீவனைக் குறிக்கிறது. சுகதுக்க சம்பந்தமான அந்தக்கரணத்துக்கும் பரமாத்மாவுக்கும் இரண்டுக்கும் சம்பந்தப்பட்டதாக நாமை எண்ணுகிறோம். ஆத்மாவுக்கு நம்முடைய சுகதுக்க சம்பந்தத்தை கல்பிப்பது ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை நாம் அறியாமல் அஜ்ஞானத்துடன் இருப்பதுதான் காரணம். அகங்காரம் (சுகதுக்கானுபவமுள்ளது) கெடுதலானது. அஜ்ஞானத்தாலுண்டானது இதை விடவேண்டும் ஆகவே ஆத்மாவின் பிரத்யக்ஷமே பாக்கி நிற்கிறது. 'தத்' என்பது பிரத்யக்ஷமாயில்லாத பரமாத்மாவைக்குறிக்கிறது. அந்தக்கரணத்தை ஆத்மாவுடன் சேர்த்துக்கொண்டு ஆத்மாவுக்கு சுகதுக்கத்தை கல்பிப்பதுபோல் அஜ்ஞானத்தால் ஜீவன் தன்னை பரமாத்மாவைக்காட்டிலும் வேறாகத் தீர்மானிப்பதால் பரமாத்மா பிரத்தியக்ஷமல்ல என்ற எண்ணம் ஏற்பட்டது. ஆகவே பிரத்யக்ஷத் தன்மை ஆத்மாவிடம் தோன்றவில்லை என்ற எண்ணத்தையும் நீக்கவேணும்.

'தத்' என்றபதத்தின் அர்த்தமும் 'துவம்' பதத்தின் அர்த்தமும் வெவ்வேறு. இரண்டும் ஒரே வஸ்துவைக்குறிப்பதில்லை. அப்படியிருக்க 'தத்' பதத்தில் இருக்கும் அத்துவிதீயம் என்ற தன்மை 'துவம்' பதத்தின் சம்பந்தமான துக்கத்தையும் தனித்தன்மையையும் எப்படி ?

பதில்: இந்த ஆக்ஷேபணை சரி இல்லை. இங்கே இரண்டு வஸ்துக்களைப்பற்றி அகற்றுபவர், அகற்றப்படுபவர் என்ற அர்த்தத்தில் சொல்லவில்லை. இந்த வேத வாக்கியத்தால் நாம் தெரிந்துகொள்வதாவது: ஆத்மா அத்துவிதீயமானது, பிரத்யக்ஷானுபவமுள்ளது என்று. இதை நாம் முன்பு அறிந்துகொள்ளவில்லை, 'தத்' என்ற பதத்தை

'த்வம்' என்பதுடன் சேர்க்கவேணுமானுல் 'துவம்' பதத்தின் தனித்திருக்கும் தன்மையையும் 'தத்' பதத்தில் உள்ள பிரத்யக்ஷமில்லை என்ற எண்ணத்தையும் நிவர்த்திக்கவேண்டியதுதான் வழி.

அக்ஞானத்திஞல் ஜீவன் தனிப்பட்டது என்ற தவருன எண்ணம் 'தத்' பதத்தின் அத்துவிதீய பிரும்ம ஞானம் ஏற்படுவதால் மாறுதலடையும். ஏனெனில் சுகதுக்கங்கள் உள்ளதும், ஆநேகத்வம் முதலிய தோஷங்களுக்குட்பட்டது மான சிருஷ்டிக்கும், அத்துவிதீயத்தன்மைக்கும் விரோத மிருப்பதுடன் ஆத்மாவுக்கும் பிரத்யக்ஷமின்மை என்பதற்கும் முறணுகும்.

**கேள்வி :** தத்பதார்த்தமான பரமாத்மாவை த்வம் பதார்த்தமான ஜீவாத்மாவோடு சேர்த்து ஒன்ருகக் கூறும் பொழுது ஒன்றுக்கொன்று விரோதமிருப்பதால் ஸம்ஸாரித் தன்மைக்கும் பரோக்ஷத்தன்மைக்கும் பாதம் கூறப்பட்டது. ஏன் இப்படிச் சொல்லவேண்டும்? இந்த விரோதம் என்ற காரணத்தைக்கொண்டே ஸம்ஸாரித்தன்மை பரோக்ஷத் தன்மைகளால் தத்த்வம் பதார்த்தங்களான ஜீவபரமாத் மாக்களுக்கு ஏன் பாதம் சொல்லக்கூடாது? ஆகவே இந்த வாக்யம் ஜீவப்ரஹ்மைக்யத்தைக் கூறவில்லையென்று கூறிவிடலாமே.

**பதில் :** அறியப்படாததும் நன்மை பயக்குவதுமான விஷயத்தில்தான் வேதத்துக்குக் கருத்து இருக்கும் தத்பதார்த்தமான ப்ரஹ்மமும் த்வம் பதார்த்தமான ஜீவனும் ஒன்று என்பது நாம் அறியாதது இதஞல் முக்தி என்னும் புருஷார்த்தம் ஏற்படுகிறது. இதில் தான் சுருதிக்குத்தாத்பர்யம் ஸம்ஸாரித்தன்மையும் பரோக்ஷத் தன்மையும் நாம் அறியாததல்ல. இதஞல் பலனும் கிடை யாது ஆகவே தத்த்வம் பதார்த்தங்களான ஜீவபரமாத்மாக் கள் ஒன்றுக்கொன்று சேர்ந்துகொண்டு விருத்தமான ஸம்ஸாரித்தன்மை பரோக்ஷத்தன்மைகளைத் தள்ளிவிடு கிறது என்றுதான் சொல்லவேண்டும்.

மேலே சொன்னபடி 'தத்' 'துவம்' பதங்களின் அர்த்தம் தெரிந்தால், வேதத்தில் சொல்லி இருப்பதற்கும் அனுபவத்துக்கும் வித்தியாஸமே தோன்றுது. ஆனால் சிலர் இதில் விரோதாம்சம் இருப்பதாய் எண்ணுகிறார்கள். அவர்கள் சொல்வது யாதெனில், வேதம் நாமே ஆத்மா என்கிறது. நாம் ஆத்மா அல்ல என்று நமக்கு அனுபவத்தால் தெரியும். ஆகையினால் வேதவாக்கியம் நமக்கு அனுபவத்துக்கு வராததை அனுபவத்துக்கு கொண்டுவர வேணும் என்ற உபாசனை கட்டளை ரூபமானதுதான்.

**பதில்:** வேதவாக்கியத்தில் கிரியை ஏதும் சொல்லப் படாதபோது 'த்யானம் செய்யவேணும்' என்று எப்படி அர்த்தம் கொள்வது. அந்த வாக்கியம் ஒரு உண்மையை விளக்குகிறதே தவிர கர்மாவை (காரியத்தை) சுட்டிக் காட்டவில்லை. இது முடிவான தத்வம். இதை அடைய முடியுமா, இனி பிற்காலத்தில் அடையவேண்டுமா என்ற சந்தேகத்துக்கே இடமில்லை.

மேலும் பிரத்யக்ஷம் அனுமானம் சப்தம் ஆகிய பிரமாணங்கள் ஏன் ஆதாரமாகின்றன என்றால் இதர ஆதாரங்களினால் அந்த அறிவு உண்டாகாதது என்ற காரணம்தான். பிரத்யக்ஷம் சப்தம் (வேதம்) இரண்டும் வெவ்வேறானவை. இவைகளினால் ஏற்படும் அறிவுக்கும் வித்தியாஸம் உண்டு. ஆகவே இவைகளுக்குள் முரண் ஏற்படுகிறதே என்று சொல்வது சரியல்ல.

ஒரு பிரமாணத்தின் மூலம் கிடைக்கும் அறிவு மற்றதின் மூலம் கிடைப்பதுபோலாகும் என்றால் விபரீதம் ஏற்படும். எப்படியெனில், கண் பார்த்ததை, காதின் மூலம் கிடைத்த அறிவு என்று வந்துவிடும் "இது சப்தமல்ல, இது வர்ணம்" என்பான் ஆகவே இரண்டு பிரமாணங்களுக்குள் முரண் என்பதே இல்லை.

பல இந்திரியங்களால் ஏற்படும் அறிவுபோல் பல பிரமாணங்களினால் ஏற்படும் அறிவும் வெவ்வேறு விதமான

தால் எவ்வித பாதகமும் ஏற்படாது. இரண்டு விஷயங்கள் ஒரே ஆதாரத்திலிருந்து (பிரமாணத்திலிருந்து) ஏற்பட்டது என்று சொல்வதானால் அந்தப் பிரமாணம் சரியானதல்ல எனலாம். அதில் ஒன்று சரியானது மற்றது தவறானது ஆகவே பிரத்யக்ஷத்தினால் உண்டான ஒரு தவறு பிரத்யக்ஷத்தினால் உண்டான சரியான அர்த்தத்தினால்தான் நீங்கும். அதேபோல சப்தத்தினால் (வேதத்தினால்) தோன்றும் ஒரு தவறான அர்த்தம் அதே வேதமாகிய பிரமாணத்தின் மற்றொரு சரியான அர்த்தமுடையதினால் தான் நிவர்த்திக்கப்படும்.

ஒரு தீர்மானத்துக்கு வருவதற்கு பல பிரமாணங்கள் சேர்ந்து காரணமாகலாமே என்று கேட்டால் அது சரியாகாது. ஏனெனில் ஒவ்வொரு பிரமாணமும் வெவ்வேறு ஆதாரங்களுடையவை. அவைகளைக்கொண்டு ஏற்படும் அறிவு அதனாலேயே சித்தாந்தமடையும். இதற்கு மற்றப் பிரமாணத்தினால் கிடைக்கும் அறிவுதான் பலம் கொடுக்கும் என்று சொல்வோமாகில் ஒவ்வொரு பிரமாணத்திற்கும் உள்ள தனிசக்தியே போய்விடும்.

மேலே சொல்லப்பட்ட சர்ச்சையில் பிரத்யக்ஷபிரமாணத்தினால் ஜீவன் சுகதுக்கத்துக்குட்பட்டது என்று தீர்மானிக்கப்படுகிறது. இது வேத வாக்கியத்தில் சொல்லப்பட்ட "ஆத்மா மாறுதலற்றது, அத்துவிதீயமானது" என்ற முடிவுக்கு விரோதமானது என்று வைத்துக்கொண்டு பார்த்தோம்.

ஆனால் வாஸ்தவத்தில் பிரத்தியக்ஷமோ மற்ற எந்த பிரமாணமோ ஆத்மா சுகதுக்கத்துக்குக்கட்டுப்பட்டது என்று தீர்மானிக்கமுடியாது. ஆத்மாவின் லக்ஷணம் என்று ஒன்றை அறிவதானால் ஆத்மாவையும் அறிய வேண்டுமே. ஆனால் எந்தப் பிரமாணத்திலும் ஆத்மா அறியப்படும் வஸ்துவாகவே சொல்லப்படவில்லையே. ஆகவே அதன் குணங்கள் என்று சொல்லப்படும் சுகமும்

துக்கமும்கூட அறிவிற்கானதாக ஏற்படாதே. நம்முடைய அறிவு முழுவதும் ஒரு வஸ்துவைக்குறித்துத்தான் ஏற்படும். ஆனால் கர்தாவான ஆத்மா அறிவிற்கு விஷயமாகமுடியாது.

பிரமாணங்களினால் ஆத்மா சுகதுக்கத்துக்குட்பட்டதாய் இருக்கிறது. அதனால் வேதவாக்கியம் 'ஆத்மா'வைப் பற்றி த்யானம் செய்யவேண்டும் என்பதற்காகத்தான் உத்தேசிக்கிறது என்று ஒப்புக்கொள்வோமாகில் அது பல தொந்திரவுகளுக்குக் காரணமாய் விடுகிறது. பிரமாணங்களினால் அறியப்பட்டு தீர்மானிக்கப்படும் ஆத்மாவின் துக்கானுபவம் அதன் வாஸ்தவரூபம் என்றே கொள்ள வேண்டும். அப்படியானால் எவ்வளவு தியானம் செய்த போதிலும் இந்த துக்கமாகிய குணம் போகாது. ஆத்மாவே போனால்தான் அதுபோகும். அதனால் ஆத்மாவுக்கு விடுதலை (மோக்ஷம்) என்பதே கிடையாது என்று தீர்மானிக்க வேண்டும். அல்லது ஆத்மாவே கிடையாது என்ற நிலை ஏற்படும்.

கேள்வி: ஜீவனே பிரும்மம் என்று நன்றாக தியானம் செய்தால் ஜீவனுக்கு இருக்கும் துக்கங்கள் கஷ்டங்கள் நிவர்த்தியாகி விடாதோ.

பதில்: அதெப்படி முடியும்? பிரத்யக்ஷத்தினால் ஏற்படும் அறிவுக்கு மாறாக தியானம் எதைச் செய்யமுடியும்? ஆகவே தியானம் இதை செய்யமுடியாது.

ஆத்மாவின் ஸ்வரூபம் வேதத்தில் சொல்லப்பட்டது "தத்துவமஸி" என்று. இதையே இடைவிடாமல் தியானம் செய்தால் ஜீவன்தான் ஆத்மா என்ற நம்பிக்கை ஸ்திரமாகுமல்லவா? ஏகாக்ர சித்தமும் ஏற்படுகிறது. ஒரு வஸ்துவைக் குறித்து தீவிரமாக ஒரு வழியில் தியானம் செய்தால் அது வாஸ்த்வத்தில் இல்லாமல் இருந்த போதிலும் அது இருக்கிறதாகவே தோற்றம் கிடைக்கிறதல்லவா அதுபோல் ஜீவனே ஆத்மா என்று இடை

விடாமல் தியானம் செய்தால் ஜீவனிடத்தில் துக்கம் நீங்கிவிடுமல்லவா ?

பதில்: பரிசீலனை செய்தால் இந்த தீர்மானம் கொஞ்சமும் நிற்காது. தியானத்தினால் மனதின் ஏகாக்ர நிலைதான் கூடும். அடிக்கடி சொல்வதனால் எந்த ஸத்யமான விஷயமும் ஏற்படாது. அல்லது தியானம் ஜீவனின் துக்கத்தை நிவர்த்திக்கின்றது என்று வைத்துக்கொண்டபோதிலும், அது சாசுவதமாக இருக்காது. ஏனெனில் காரியத்தினால் ஏற்படும் வஸ்து சாசுவதமாய் இருக்காதல்லவா.

மேலும் பல வருஷங்களாக உள்ள 'நான் துக்கப்படுபவன்' என்ற எண்ணம் சிறிய காலத்தில் தியானத்தினால் மாற்றப்படுமோ? அப்படியானால் தியானத்தினால் ஏற்பட்ட 'நானே ஆத்மா' என்ற எண்ணமும் எவ்வளவு காலம் நீடிக்கும்? நீடிக்காது.

கேள்வி: இது வேதவாக்கியத்தினால் ஏற்படுவதால் சாசுவதமாக இருக்கலாமல்லவா

பதில்: வேதம் வஸ்துக்களின் உண்மையான நிலையை பற்றித்தான் கூறுமே தவிர வஸ்துக்களின் நிலைமையை உண்டுபண்ணாது. தியானத்தினால் ஏற்படுவதெல்லாம் வெகுகாலம் இருக்காது என்பது நாம் அனுபவத்தில் கண்டதுதானே.

பிரத்யக்ஷத்தினால் ஏற்படும் அறிவினால் ஆத்மா துக்க சம்பந்தமுள்ளது என்று சொல்வது சரியல்ல என்று சொன்னோம். அப்படி பிரத்யக்ஷத்தின் முடிவு என்றபோதிலும், அது வேதவாக்கியத்தின் அர்த்தத்துக்கு மாறாக நிலைநிற்க முடியாது. ஏனெனில் பிரத்யக்ஷ ஞானம் பல சந்தர்ப்பங்களில் நம்மை ஏமாற்றிவிடுகிறது. பிரமிக்கச் செய்கிறது. ஆத்மா துக்க சம்பந்தமுள்ளது என்ற எண்ணம் தவறுதல் என்று சுஷுப்தியில் தெரிந்து அப்போது ஆத்மா இருக்கிறது துக்கமுமி

இல்லை. ஆகவே ஆத்மா துக்கமுடையது என்ற எண்ணம் உலகத்தில் பிரமையினால் சொல்லப்பட்டுவருகிறதே தவிர வாஸ்தவமல்ல. ஆகவே வேதவாக்கியத்துக்கு விரோதமாக பிரத்யக்ஷ பிரமாணம் நிற்காது.

ஞானத்தின் அம்சமே துக்கமின்மை பிரத்யக்ஷ பிரமாணத்தினால் ஆத்மா துக்கமுள்ளது என்று சொன்னாலும் ஒருவன் தானாகவே உணரும் விஷயத்துக்கு மாறாக அதை நம்பமாட்டான். ஏனெனில் மனிதனின் அறிவு உள்ளே ஏற்படுவது பிரத்யக்ஷ ஞானம் வெளியில் உள்ளதால் ஏற்படுவது.

வேதமும் (கடோபநிஷத்தில்) இந்திரியங்கள் வெளித் தோற்றமுடையனவே தவிர உள்நோக்குள்ளவை அல்ல ஆகவே இந்திரியங்களினால் ஏற்பட்ட ஞானம் எப்போது நிராகரிக்கப்படுகிறதோ அப்போதுதான் ஜீவாத்மாவின் ஸ்வரூபம் விளங்கும்.

சர்ச்சை செய்து விளக்கம் செய்வதற்காகவே பிரத்யக்ஷத்துக்கும் சப்தத்துக்கும் (வேதவாக்யம்) வித்தியாஸம் இருப்பதாய் சொன்னோம் ஆனால் பிரமாணங்களில் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கமுடியாது என்பதை நிரூபித்தோம் பிரத்யக்ஷ பிரமாணத்திற்கும் வேதவாக்யத்துக்கும் விரோதம் இருப்பதாய் நாம் எண்ணுவது தவறான அபிப்ராயத்தினால்தான் வேதவாக்கியம் விரோதமாயிருக்குமேயானால் பிரத்யக்ஷத்தினால் ஏற்படும் அறிவு வாஸ்தவமல்ல என்றுதான் உணரவேண்டும். பிரத்யக்ஷ பிரமாணத்தினால் ஆத்மா துக்கமுடையது என்று தோன்றினால் இது அந்தக்கரணத்தையே ஆத்மா என்று எண்ணுவதால்தான் அதன் சுகதுக்கத்தை ஆத்மாவினுடையதுபோல் ஆரோபிக்கிறோம் என்று தெரிந்துகொள்ளவேணும். ஆகவே இவ்விரண்டு பிரமாணங்களுக்கும் ஒன்றுக்கொன்று முரண் இல்லை,

மற்ருெரு உதாஹரணம்— 'மேடை பலமாக சிரித்தது' என்ருல் மேடையின்மேல் உள்ள குழந்தைகள் என்று கொள்ளவேணும். 'அக்னி நன்ருக படிக்கிறது' என்ற இடத்தில் 'அக்னி' என்பது அதைப்போல் நல்ல காந்தியுள்ள சிறுவன் என்று உணரவேணும். ஆகவே பதத்தில் தோன்றும் அர்த்தத்தை விட்டுவிட்டு இரண்டாவதான அர்த்தத்தை எடுத்துக்கொள்ளவேண்டும். அதுபோல் ஆத்மா துக்கி என்ற இடத்தில் அது அந்தக்கரணத்தையே குறிக்கும்.

"நான்" என்ற பதத்தால் 'ஆத்மா' குறிப்பிடப்படுவது ஏனெனில் ஆத்மாவை எந்த பதத்திலும் நேரடியாக விளக்கிச்சொல்லமுடியாது. நான் என்ற பதத்திலும் ஆத்மாவை நேரடியாக குறிக்கமுடியாது. ஒரு வஸ்து குறிக்கப்படவேண்டுமாளுல் அதற்குச்சில நிலைகளும் குணங்களும் இருக்கவேண்டும். ஆத்மாவுக்கு எந்த குணமும் கிடையாதே. வெட்டவெளியான ஆகாசத்தைப்பார்த்து அதை இன்னது என்று சொல்லமுடியாமல் 'நீலமானது' 'புகையுடன் கூடியது' என்று, அறியாதவன் சொல்வதுபோல் அக்ஞானத்தின் காரணத்தால் சுகதுக்கத்துக்கு சம்பந்தப்படாத ஆத்மாவுக்கு உலக அனுபவம் இருப்பது போல் பேசுகிருேம்.

சந்தேகம்: எல்லா எண்ணங்களுமே பொய் தோற்றம் ஆத்மா ஒன்றுதான் நித்யமானது என்ருல் 'நான்' என்ற பதத்தால் மட்டும் ஏன் ஆத்மா குறிக்கப்படுகிறது.

பதில்: ஆத்மாவுக்கு மிகவும் நெருங்கியதாய் காணப்படுவது 'நான்' என்ற பதத்தால் குறிக்கப்படும மனிதன் தான். இது உள் நோக்கில் கிடைக்கும் அறிவு. இதைவிட நெருங்கிய வஸ்து இருக்கமுடியாது என்றதால் அப்படி சொல்லுகிருேம்.

ஆத்மாவை வேறு வார்த்தைகளினுல் அறிவிக்கமுடியுமாளுல், அது அனுத்மாவாகிவிடும். வேதவாக்கியம்

பிரமாணமற்றதாகிவிடும். ஆகவே 'நான்' என்ற வார்த்தை அந்தர்கரணத்தையே குறிக்கிறது. ஆத்மாவை மறைமுகமாகத் தெரிவிக்கிறது.

ஒரு வார்த்தையால் ஒரு வஸ்துவை சுட்டிக்காட்ட வேண்டுமானல் அந்த வஸ்துவுக்கு சம்பந்தப்பட்ட குணமோ காரியமோ குறிக்கப்படவேண்டும். அல்லது பொதுவாக அந்த குணம் இருப்பதாய் உலகத்தில் அனுபவத்தில் இருக்கவேண்டும். ஆத்மாவுக்கு இதுபோன்ற சம்பந்தமே கிடையாது. இதற்கு குணம் இல்லை. க்ரியை இல்லை. சாமான்யமாய் பேச்சில் கலந்து சொல்லப்படுவதுமில்லை, ஆகவே வார்த்தைகளினுல் ஆத்மா குறிப்பிடப்படமுடியாது.

சந்தேகம்: பதத்தினுல் சுட்டிக்காட்ட முடியாது எனில் 'தத்துவமஸி' என்ற வாக்கியத்தினுல் எப்படி அதை உணர்த்த முடியும் ?

பதில்: 'நான்' என்பது அந்தக்கரணத்தைக் குறிக்கிறது. அந்தக்கரணம் 'சித்' (ஞான)த்துடன் சம்பந்தப்பட்டது. ஆகவே அந்தக்கரணத்திலிருந்து ஆத்மாவை உணர்ந்துகொள்ளமுடிகிறது.

உலகத்தில் மறைமுகமான குறிப்பினுல் வஸ்து அறியப்படலாம் ஆனுல் வஸ்து ஒன்று இருக்கவேண்டும். இல்லாத வஸ்துவைப்பற்றி மறைமுகமாகவும் எப்படி அறிவது. ஆனுல் "நான்" என்பதால் அப்படிப்பட்ட மறைமுகமான அர்த்தம் குறிப்பிடப்படுகிறது என்று சொல்லுகிறேம். வேறு காரணங்களினுல் அறிவிக்கப்படாத ஆத்மா தானே அறிவுமயமாயிருக்கிறது என்பதுதான் இதற்குக்காரணம்.

சந்தேகம்: 'நான்' என்ற வார்த்தைக்கும் ஆத்மாவுக்கும் சம்பந்தமில்லை என்ருல் 'தத்துவமஸி' என்ற வாக்யத்தினுல் எப்படி அந்த சம்பந்த அறிவு ஏற்படும்.

பதில்: உதாஹரணம் ஜனங்கள் தூங்கிக்கொண்டிருக்கும்போது ஒருவனுடைய பெயரைச் சொல்லிக் கூப்பிட்டால் அவன் எப்படி விழித்துக்கொள்கிருனே அதுபோலவேதான்,

இங்கே தூங்குகிறவனுக்கு பெயரும் அதன் அர்த்தமும் விளங்குவதில்லை. ஆனால் அவன் பெயர் என்ற சப்தம் அவனைத் தூக்கத்திலிருந்து எழுப்பிவிடுகிறது. விழித்துக் கொண்டிருந்தாலன்றி வார்த்தையைக் கேட்கமுடியாது. கேட்டாலன்றி வார்த்தையின் உட்கருத்தான அர்த்தத்தை அறியமுடியாது. இதை அவன் உணரவேண்டுமானால் விழித்திருக்கவேண்டும். விழித்திருந்தால் அவனைக்கூப்பிட வேண்டிய அவசியமே இல்லை. ஆகவே அவனுக்கு தூங்கும்போது வார்த்தைக்கும் அதன் உட்கருத்துக்கும் உள்ள சம்பந்தம் அறிவிற்கு வராமல் இருந்தபோதிலும் இதே வார்த்தையினால் எழுப்பப்படுகிறான் என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

சந்தேகம்: ஆத்மா அக்ஞானத்துக்கு ஆதாரமாயும் அதே சின்மய (அறிவுமய)மாகி அக்ஞானத்தை நிவர்த்திக்கவும் செய்வதால், அக்ஞானம் நீங்கினபோது அதில் ஒரு மாறுதல் காணப்படவேண்டும்.

பதில்: இல்லை. ஆகாயம் நீலமானது என்ற எண்ணம் தவறு என்று உண்மையை உணர்ந்தால் தெரிகிறது. அப்போது வஸ்துவான ஆகாயத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படுவதில்லையே அதேபோல் நம் அக்ஞானத்தினால் ஆத்மாவைப்பற்றிய தவறான அபிப்பிராயம் மாறினவுடன் ஆத்மாவிடத்தில் எவ்வித மாறுதலுமில்லாமலேயே அதன் உண்மை நமக்குப் புலப்படும்.

அந்தக் கரணத்தை ஆத்மா என்று கிரமமாக ஆத்மாவை உணரமுடியும் என்று முன் சொல்லப்பட்டது. பொய்யானதைக்கொண்டு உண்மையை அறியமுடியுமா. புகையைக்கண்டு நெருப்பை ஊகிக்கிறோம். ஆனால் புகைபோன்ற மூடுபனியினால் நெருப்பு இருக்கிறது என்ற எண்ணம் உண்டாகாதே.

பதில்: உலகில் எதுவும் முற்றிலும் உண்மையானது என்பது கிடையாது. எதுவும் உண்மை, பொய்மை

கலந்ததேதான். உதாஹரணமாக ஒரு குடம் இருக்கிறது. இதில் உண்மை, பொய்மை கலந்திருக்கிறது. 'இருக்கிறது' என்ற அம்சம் குடம் ஏற்படுவதற்கு முன்னும் அது உடைந்த பின்னும் கிடையாது. ஆகையால் 'எப்போதும் இருக்கிறது' என்ற அர்த்தம் பொருந்தாது. 'இல்லை' என்றும் சொல்ல முடியாது. ஏனெனில் எதிரில் காணப்படுகிறது. ஒரே சமயத்தில் 'இருத்தல்' 'இல்லை' என்ற இரண்டும் சேர்ந்து இருக்காது. அடுத்தடுத்து அந்த நிலைமையென்றும் என்றும் சொல்லமுடியாது. ஏனெனில் மாறிமாறித் தோன்றுவது சத்தியமாக முடியாது. ஆகவே இது உண்மையுமல்ல, பொய்யுமல்ல, எல்லாம் தோற்றமே, விளக்கமுடியாதது. உலகம் இப்படியே இருந்தபோதிலும் அது பல காரியங்களுக்கு உபயோகமாகிறது. அதேமாதிரி அந்தக்கரணம் முற்றிலும் உண்மையல்லாமல் போனாலும், அது தோன்றுகிறது வேலை செய்கிறது. அதன் மூலம் உண்மையை உணரமுடியும்.

வேதவாக்கியத்தினால் அக்ஞானம் நீங்கி ஞானம் ஏற்படுகிறது. அக்ஞானத்துக்கு இருப்பிடம் ஆத்மாவேதான் அத்துடன் இது மிகவும் லேசாக சம்பந்தப்பட்டிருக்கிறது. அக்ஞானத்துக்கு ஆத்மா விரோதி. அக்ஞானம் என்பது மெல்லிய தோற்றம்தான். ஆகவே வேதவாக்யத்தால் இது சீக்கிரம் நீங்கிவிடுகிறது.

ஆத்மா நித்யமானது, மாறுதல் அற்றது, ஞானமயமானது இத்துடன் எப்படி அக்ஞானம் சேர்ந்து இருக்கும்.

நமக்குத் தோன்றுவதால் அக்ஞானம் அங்கு இருக்கவேண்டும் என்று நாம் ஒப்புக்கொள்ளவேணும் "நான் அறிவில்லாதவன்" "நான் என்னையும் மற்றவர்களையும் அறியவில்லை" என்கிறோம். ஆகவே அக்ஞானம் இருந்தால் ஒழிய இந்த எண்ணம் வராது. ஆத்மா அறிவுமயமானபோதிலும் அக்ஞானம் இருக்கிறது என்றும்

உணர்கிருேம், ஆந்தை பகலில் இருட்டியிருக்கிறது என்று எண்ணுவதுபோல். இதுதான் அக்ஞானத்தின் ஸ்வபாவம்.

சந்தேகம்: ஆத்மா ஞானமயமானது அறிபவன், அறிவு, அறியப்படுபவன் என்ற வித்யாஸமில்லாதது. இதில் அக்ஞானத்திற்கு எப்படி இருப்பிடம் உண்டு.

பதில்: ஆத்மா ஞானமயம், இதற்கு ஆரம்பம் முடிவு கிடையாது. இருந்தாலும் அக்ஞானத்திஞல் மூடப்பட்டிருப்பதால் உண்மை விளங்குவதில்லை. விசாரணையின்பேரில் சரீரம், இந்திரியங்கள் இவை ஆத்மாவல்ல என்று தெரிந்து கொள்கிருேம். ஆஞல் சாதாரணமாக சரீரம்தான் ஆத்மா என்ற எண்ணம் ஏற்படுகிறது. விசாரணைசெய்து இது தவறு என்று உணர்ந்தபின் ஆத்மா எப்பேர்பட்டது என்பது தெரியாமல் அது ஒன்றுமில்லைபோல் தோன்றுகிறது இந்த சமயத்தில்தான் வேதவாக்யம் 'தத்துவமஸி' உபயோகப்படுகிறது. ஆத்மாவே தெரியாமல் இருக்கும் நிலையிலிருந்து ஆத்மா இருக்கிறது என்ற நிலை வருகிறது.

கேள்வி: தேஹம் முதலான பாவ (இருக்கும்) வஸ்துக்களைக்காட்டிலும் ஆத்மா வேருனது என்பதை அனுமானத்தால் தீர்மானிக்கிருேம். இதுபோல் அனுமானத்தைக் கொண்டே ஆத்மா இல்லாததும (அபாவம) அல்ல என்று தீர்மானிக்கலாமே. இந்த விஷயத்தில் வேதவாக்கியம் எதற்கு?

பதில்: உலகில் இருக்கும் பொருள்களான தேஹம் முதலியவற்றைக்காட்டிலும் ஆத்மா வேருனது என்பதை அனுமானத்தால் தீர்மானிக்கிருேம். அப்பொழுது ஆத்மா இல்லாத பொருள் என்று ஏற்படுகிறது. ஆகவே அனுமானத்தைக்கொண்டு ஆத்மா இல்லாத பொருள் என்று தீர்மானிக்கும்பொழுது இல்லாத பொருள் அல்ல என்பதை அனுமானத்தால் எப்படித் தீர்மானிக்கமுடியும். ஆதலால் ஆத்மா இல்லாத பொருளல்ல என்பதை வேதவாக்கியத்தைக்கொண்டுதான் அறிந்துகொள்ளவேண்டும்.

ஆத்மாவினிடத்தில் அக்ஞானம் எப்படி சேர்ந்திருக்கும் என்ற கேள்வியே ஏற்படாது. ஏனெனில், ஞானம் உதய மாகுமுன் அக்ஞானம் தீர்மானமாக இருக்கிறது என்று நமக்கு அனுபவமாகிறதே. ஞானம் வந்த பின்பு அக்ஞானம் முக்காலத்திலும் இல்லை என்ற அறிவு உண்டாகிறது. ஆகவே அந்தக் கேள்விக்கே இடமில்லை.

வேதவாக்கான 'தத்துவமஸி' என்பது அக்ஞானத்தை முற்றிலும் நிவர்த்தித்து விடுகிறது. இதை விட்டுவிட்டு வேறு பிரமாணங்களை தேடுபவன் கண் (இந்திரியத்தால்) ணிஞல் ருசியை அறிய பிரயத்னம் செய்வதுபோலாகும்.

வேதவாக்கியத்திலிருந்தே ஆத்மாவின் தத்துவத்தை ஒருவன் அறியாவிடில் வேறு எந்த வழியிலும் அதை அறிய முடியாது. இது நம்பத்தக்கதல்லவென்ருல் வேறு எதுவும் இதைவிட நம்பத்தக்கதாக ஆகாது.

சந்தேகம்: 'தத்துவமஸி' என்ற வாக்கியத்தை விஷயத்தைக் குறிக்கும் தீர்மான வாக்கியமாக இல்லாமல் தியானம் செய்வதற்கு ஒரு கட்டளையாக ஏற்றுக்கொள்ள லாமே. ஆத்மாவைக் குறித்து தியானம் செய்ய அது சௌகரியமாகுமே.

வாக்கியத்தின் தாத்பரியம் சுத்தமாக இருக்கும் போது கட்டளை இருப்பதாய் ஏன் ஊகிக்கவேண்டும். மேலும் இந்த 'தத்துவமஸி' என்ற வாக்கியம் உள்ள அனுவாகத்(பாகம்)திலேயே கட்டளையிடும் அம்சமே சொல்லப்படவில்லை.

மேலே சொல்லப்பட்ட காரணங்களிஞல்
வாக்கியத்தை அனுசரிப்பதாலேயே நமக்கு வேண்டிய அர்த்தம் கிடைத்துவிடுகிறது. சாந்தோக்ய உபநிஷத்தில் 7-வது அத்யாயத்தில் சொல்லியபடி பெயர் (சப்தம்) முதல் பிராணன் வரை உள்ளவை எல்லாம் ஆத்மா அல்ல. மோக்ஷத்தை அடைய விரும்புபவன் இதை அறியும்போது

வெளி உலகில் உள்ள வஸ்துக்களில் அவனுக்கு பற்றில்லாமல் போய்விடுகிறது. அவன் தன் மனதை அடக்கினவனாகிறான். தைத்திரீய உபநிஷத்தில் (II) சொல்லப்பட்டபடி தேகத்தில் உள்ள பஞ்சகோசங்களையும் தாண்டிக்கொண்டு 'தத்துவமஸி' வாக்கியத்தின் உண்மையான அர்த்தத்தை உணர்கிறான். அப்படி இருக்கும்போது தியானம் என்பது எதற்காகத் தேவை.

நல்ல உத்தமாதிகாரி இந்த வேத வாக்கியத்தைக் கேட்பானாகில் அவனுக்கு உடனே வாஸ்தவஞானம் உண்டாகும். அப்படி இல்லாவிடில் இது முக்கியமான பிரமாணம் என்று எப்படிச் சொல்வது.

இந்த வாக்கியத்தை ஆத்மாவைச் சிந்தனை செய்யும்படிக்கான கட்டளை வாக்கியம் என்று சொன்னால் இதன் தத்துவார்த்தம் தள்ளப்பட்டதாக ஆகாதே.

பதில்: தியானத்துக்காக சொல்லப்பட்டது என்று எடுத்துக்கொண்டுவிட்டால் இவை வாஸ்தவமல்ல என்று ஏற்பட்டுவிடும். ஏனெனில் அது பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களுக்கு விரோதமாக ஆகும்.

சந்தேகம்: இந்த வாக்கியம் கண்ணுக்குத்தெரியாத ஒரு வஸ்துவைப்பற்றிச் சொல்லுகிறது ஆகவே இதை தியானம் செய்தால்தான் உண்மை தத்துவம் விளங்கும் என்று சொல்லக்கூடாதோ.

பதில்: இது சரியல்ல. தியானம் என்பது வார்த்தைகளையும், வாதங்களையும் திருப்பித்திருப்பிச் சொல்வதுதான். முதல் தடவையிலேயே அவை தத்துவத்தை விளக்காவிடில் திருப்பிச்சொல்வதனால் என்ன பலன் கிடைக்கப்போகிறது.

தியானத்தினால் ஏதாவது பலன் கிடைக்கும் என்றால் வேதவாக்கியத்தையே திரும்பத்திரும்ப சொல்லவேண்டியது அப்போது ஆத்மாவின் தத்துவம் நன்றாக விளங்கும்.

தியான விதியை ஒப்புக்கொண்டால் அச் சமயம் பனம் தியானத்தில் ஈடுபட்டிருப்பதால் சாஸ்திர விஹிதமான கர்மாக்களையும் செய்யமுடியாதபடியால் அவன் எல்லாக் கர்மாக்களையும் விட்டுவிடுவது நியாயமாகும். சாஸ்திர விரோதமில்லை. ப்ரஸங்க்யானமில்லாமல் கர்மாக் களை விடுவது நியாயமில்லை. சாஸ்திர விரோதம். அவன் ஆரூடபதிதன் (உயர்நிலையடைந்து கீழே விழுந்தவன்), ஆகவே ப்ரஸங்க்யானமில்லாமல் பரமஹம்ஸ நிலையைக் கைக்கொண்டால் அது பௌத்த சர்யைபோல சாஸ்திர விருத்தமாகும்.

பதில்: த்வம் பதார்த்தத்தை சோதித்துத் தெரிந்து கொள்வதற்காகத்தான் ச்ரவணாதிகள் ஏற்பட்டுள்ளன. இந்த ச்ரவணத்திற்காகத்தான் சாஸ்திரத்திலேயே ஸர்வ கர்ம பரித்யாகம் செய்து ஸந்யாஸத்தைக் கைக்கொள்ளும் படி விதிக்கப்பட்டுள்ளது. ஆகவே சாஸ்திர முறைப்படி கர்மாக்களை விட்டுவிடுவதால் தோஷமொன்றுமில்லை. இவன் ஆரூடபதிதனல்ல இவனுடைய பரமஹம்ஸ நிலையும் சாஸ்திரீயம்தான்.

## நான்காவது அத்தியாயம்

முன் அத்தியாயங்களில் சொல்லப்பட்ட விஷயங்களை சுருக்கமாய் கவனிப்போம். இதனால் எல்லோருக்கும் நன்மை வரும்.

ஆத்மா, அனாத்மா இரண்டும் எல்லோருக்கும் பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களால் விளங்குகிறது. அனாத்மாவை நாம் அறிகிறோம். ஒரு வஸ்து அறியப் படுமானால் அறிபவன் ஒருவன் இருக்கவேண்டும் அதுவே ஆத்மா. இது முதலிலேயே அறியப்படவேண்டும்.

சரீரத்துக்கு விலக்கான வஸ்துக்கள் எல்லாம் அனாத்மா என்று தெரிகிறோம் அறியும் பொருள் ஆத்மா என்றும்

தெரிகிறோம். இந்த அறிபவனுக்கும் வெளிஉலகுக்கும் இடையில் உள்ள வஸ்துவைப்பற்றித்தான் சந்தேகம் தெளிவடைய வேண்டியிருக்கிறது.

ஆத்மாவின் விசேஷ குணங்களாவன ஞானமயம் எல்லாவற்றையும் அறிபவன். அனாத்மாவுக்கு அக்ஞானமும் மற்றவரால் அறியப்படும் தன்மையுமே தான் புகையிலிருந்து நெருப்பு இருக்கிறது என்று ஊகிக்க முடிவது போல் உடல், இந்திரியங்கள் மனசு இவைகள் அறியப்படுவதால் இவைகள் அனாத்மா என்று தீர்மானிக்கலாம்.

மேலே சொன்னபடி ஊகிப்பதற்கு முன்பு உடல் ஆத்மாவா அனாத்மாவா என்ற சந்தேகம் ஏற்படுகிறது. ஏனெனில் இதைக்குறித்து இரண்டு வகைகளிலும் பேசுகிறோம். 'இந்த உடம்பு' என்னும்போது அது வெளி வஸ்துவாகிறது. அறிகிறவனை 'நான்' என்ற பதத்தால் குறிக்கிறோம். 'நான் மனிதன்' 'நான் அழகுடையவன்' என்று சொல்லும்போது உடலையே குறிக்கிறோம். அதனால் தான் மேலே சொன்ன சந்தேகம் ஏற்படுகிறது.

ஆத்மா எது அனாத்மா எது என்று வித்யாஸம் கண்டு பிடிக்கும் வழியைப்பற்றி முன்னமேயே சொல்லப்பட்டது. அந்தக்கரணம் இரண்டிலும் சேர்ந்ததாகத் தெரிகிறது. வஸ்துக்கள் வந்துபோய்க் கொண்டு அறியப்படுகின்றன. ஆத்மா இவைகளை அறியும் சாக்ஷியாக இருக்கிறது, உள்ளிலும் இல்லை வெளியிலும் இல்லை. ஆனால் சுத்த அறிவின் பிரத்யக்ஷானுபவம்.

" ' என்று குறிக்கப்பட்ட வெளிவஸ்துவை அனாத்மா என்று தள்ளிவிடுவதால் உடல் அனாத்மாவாகி விடுகிறது, அப்போது சூன்யம் ஏற்பட்டு விட்டதாய் தோன்றுகிறது. இங்கு தான் தத்துவமஸி போன்ற வேத வாக்யங்கள் உண்மையை வெளிப்படுத்தி உதவுகிறது.

தேகம், இந்திரியங்கள், மனது இவை ஆத்மாவல்ல என்று தெரிவதுடன் திருப்தியடைந்து சும்மாயிருக்க முடிவதில்லை ஆத்மா எது என்று அறிவதற்கு ஆசை ஏற்படுகிறது. அதுவரை ஒரு கலக்கமான நிலையில்தான்

கேள்வி: இதில் என்ன கஷ்டம் இருக்கிறது. ஆத்மா நம்முடைய சமீபத்தில்தான் இருக்கிறது. இது ஸதாகாலமும் அறிவு மயமானது. இதை அறிவதில் என்ன கஷ்டம் இருக்கிறது;

பதில்: ஒரு வஸ்துவை அறியும் ரீதியிலேயே ஆத்மாவையும் அறியலாம் என்ற தவறான எண்ணம் இருக்கிறது. சரீரம் அனாத்மா என்ற பிரிவு எண்ணம் ஏற்படுவதற்கு முன்பு சரீரமே ஆத்மா என்று எண்ணுகிறோம், இது இந்திரியங்களுக்கு லக்ஷியமாகவும் ஏற்படுகிறது. பிரிவு எண்ணம் ஏற்பட்டபின்னும் நம் ஆத்மாவை இந்த ரீதியிலேயே உணர்கிறோம்.

ஆத்மாவை இந்த வழியில் அறியமுடியாது. கண் சப்தத்தை கேட்காது. ஏனெனில் அந்த ஸூக்ஷ்மேந்திரியம் வேறானது. இதுபோல் ஆத்மா மனதின் பாகமாகாததால் மனதினால் ஆத்மாவை அறியமுடியாது. சுருக்கமாய் சொல்லும்போது அறிவிற்கு உபகரணமாய் இருக்கும் இந்திரியங்கள் ஆத்மாவை அறிய உபயோகமாகாது.

சாதாரணமாய் நமக்குத்தெரியும் வஸ்துக்கள் மனதின் மாறுதல்கள். இவை தோன்றும் மறையும். ஆத்மா அப்படிப்பட்டதல்ல. எப்போதும் உள்ளது. எந்த சமயத்திலும் இல்லாமல் இல்லை. நெருங்கி இருந்து அறியும் பேர்வழியானதால் மனதினால் அறியப்பட முடியாது.

அனாத்மாவை ஆத்மாவிலிருந்து பிரித்து உணர்கிறோம். இந்தப்பிரிக்கும் சக்தி எங்கு இருக்கிறது. ஆத்மாவிடமா அனாத்மாவிடமா. ஆத்மாவிடம் இருக்கமுடியாது ஏனெனில் ஆத்மா நித்யமானது மாறுதலற்றது, ஸர்வக்ஞத்துவம்

வாய்ந்தது. அறியும் சக்தி என்பது அனுத்மாவின் அம்சமாக இருக்கமுடியாது ஏனெனில் இது ஜடம். அறியும் சக்தி இதற்குக் கிடையாது.

கட்டை எரியும்போது தான் எரிக்கப்படுகிறது. நெருப்பும் வளர்கிறது அதுபோல் மனது அறிகிறதாயும் அறியப்படுவதாயும் இருக்கிறது. இந்தப் பிரிவுபடுத்தும் அறிவு அனுத்மாவானதும் மாறுதலுள்ளதும், ஆனல் ஆத்மாவுடன் சேர்ந்தும் இருக்கும்போது அறியும் சக்தியையும் பெற்ற மனதில் தான் தோன்றுகிறது. இந்த சக்தி ஆத்மாவின் சித் ஸ்வரூபத்தின் காந்தி மனதின் பேரில் படுவதால் ஏற்படுகிறது. மனதின் தோற்றமாக இருந்த போதிலும் மனதை மீறினதாய் இருக்கிறது.

இது துவைதத்தின் ஆதாரத்தின் பேரில் இருப்பதால் ஸத்யத்தை உணரமுடியாது இதனல் மோக்ஷம் அடையலாம் என்று எண்ணினல் அது தவருகும் மோக்ஷம் என்பது வேத பிரமாணத்தினல் தான் கிடைக்கும்.

உலக அறிவுபோல் இது உள்ளது. இது அக்ஞானத்திற்கட்டது. இதில் சந்தேகமும், அறிவின்மையும் சேர்ந்தது. இதைக்கொண்டு மோக்ஷமடைய எண்ணுபவர்கள் முயல் கண்ணை மூடிக்கொண்டால் மரணத்தை தடுக்க எண்ணுவதுபோல் ஆவார்கள்.

வேதம் சொல்லுகிறது. நம் கண்ணினல் ஆத்மாவை அறியமுடியாது. எல்லாவற்றையும் பார்ப்பவரை கண்ணினல் அறியமுடியுமா ?

சரீரம், இந்திரியம், மனது இவை ஆத்மாவல்ல என்று தெரிந்தபின் நாம் யார் என்று சிந்திக்கையில் வேதம் 'தத்துவமஸி' என்று சொல்லி உண்மையை உணர்த்துகிறது. இதுதான் முதல் 3 அத்யாயங்களின் சாராம்சமாகும்.

வேதாந்தத்தை உயர்ந்த ஆசார்யர்களிடம் கேட்டாலும் இதற்கு வேறு ஆதாரம் உண்டோ என்று சிலர்

கேட்கிறார்கள். இவர்களுக்கும் சமாதானம் ஏற்படும் விவரங்களை ஸ்ரீ பகவத்பாதாளின்
எடுத்துக்காட்டுவோம்.

ஸ்ரீசங்கரர் ஒரு கேள்வியை ஏற்படுத்தினார். 'யாருக்கு உபதேசம் செய்வது' ஆத்மாவுக்கா அனாத்மாவுக்கா ஆத்மாவோ எனில் இதற்கு உபதேசம் தேவை இல்லை. அனாத்மாவுக்கோ எனில் இது உலகம் போன்றது விடுதலை பெறாதது.

அவரே உபதேசஸாஹஸ்ரீ (18-78) சுலோகத்தில் இதற்கு பதில் கொடுத்திருக்கிறார். இரண்டும் கலந்ததான அஹங்காரியான 'நான்' என்பவன் சரீரம், இந்திரியம், மனது, இவைகளுடன் கூடியவன். சுத்த சைதன்யமும் இல்லாமல் ஆனால் சைதன்யாபாஸமுள்ளவனே இந்த உபதேசத்தைக் கேட்க லாயக்குள்ளவன் என்று தீர்மானிக்கிறார்.

'தத்துவமஸி' என்ற வாக்கியம் ஆத்ம அனாத்ம விவேகம் வந்தவனிடம் தான் சொல்லவேண்டும். இல்லாவிடில் செவிடனிடம் சங்கீதம உபயோகமற்றதுபோல் ஆகிவிடும்.

அன்வயம் (இருத்தல்) வ்யதிரேகம் (இல்லாமை) ஆகிய பிரமாண வழிகளை உபயோகப்படுத்திக்கொண்டு ஆத்மாவின் நிலையை உணரலாம் என்று உபதேச ஸாஹஸ்ரீ (18-96) யில் விளக்கியிருக்கிறார்.

அதே கிரந்தத்தில் (18-97) சொல்கிறார். நல்ல தூக்கத்தில் ஆத்மாவைத்தவிற மற்ற எதையும் நாம் உணர்வதில்லை, எது எது அப்போது இல்லை என்று உணர்கிறோமோ அவையெல்லாம் அனாத்மாவாகும் அப்போது ஆத்மா இல்லையென்று சொல்வதில்லை. குறிக்கப்படக்கூடிய சில எண்ணங்கள் இல்லை என்று தான் சொல்லவேணும்.

இப்படி ஆத்மானாத்ம வஸ்து விவேகம் ஏற்பட்டவனுக்கு "தத்துவமஸி" என்ற வாக்கியத்தை வேதம் உபதேசிக்கிறது. (18–99)

'நான்' என்ற பதத்தால் குறிக்கப்படுவது ஆத்மாவின் சிதாபாஸத்துடன் கூடியது. இந்த அர்த்தத்தில்தான் 'தத்துவமஸி' என்ற வாக்கியம் சொல்லப்பட்டது. இதுதான் மோக்ஷத்தைக் கொடுக்கும். (18–101)

ஆத்மாவுக்கும் அனாத்மாவுக்கும் உள்ள வித்யாஸத்தை இன்னமும் தெளிவாக அதே கிரந்தத்தில் விளக்கியிருக்கிறார். சரீரத்திலிருந்து வெட்டித் தனியாகத்துண்டாக்கப்பட்ட கை ஆத்மாவுக்கு சம்பந்தப்பட்டதாகாது. அதேமாதிரி ஆத்மாவுடன் சேர்ந்ததாக எண்ணப்படும் சரீரம், மனது முதலிய அடையாளங்கள் உண்மையாக ஆத்மாவுக்கு சம்பந்தப்பட்டவை அல்ல.

சரீரத்தில் அணியப்பட்டிருக்கும் நகை சரீரத்துக்கு வெளிப்பட்ட வேறான வஸ்துவான போதிலும் எப்படி சரீரத்தை அழகுபடுத்துகிறது என்கிறோமோ அப்படியே ஆத்மாவுக்கு எவ்வித சம்பந்தமுமில்லாமலிருந்தபோதிலும் அக்ஞானத்தினால் ஆத்மாவுடைய குணங்கள் போல் தோன்றுகின்றன. எந்த ஸ்வரூபம் அறிகிறதோ அதுவே பிரும்மம். அறியப்படுவது விலக்கப்படுகிறது. அந்தக் கரணம் அறியப்படும் வஸ்துவாக இருப்பதால் வெட்டுப்பட்ட கையைப்போல் ஆத்மாவினுடையதாக ஆகாது. (6–4)

குடம் ஆத்மாவின் பாகமில்லை அதேபோல் அந்தக் கரணமும வெளியில் அறியப்படும் வஸ்து என்ற காரணத்தால் ஆத்மாவாகாது. இதேபோல நாம் அனுபவிக்கும் எண்ணங்கள், சுகதுக்கங்கள் ஆத்மாவுக்கு சம்பந்தப்பட்டதல்ல. ஆத்மா சுத்தமானது.

இப்படி ஆத்மா ஸ்வதந்திரமானது என்ற தீர்மானம் வேத வாக்கியத்தின் பிரமாணத்தினால் தான் ஏற்படும்.

இப்படிச் சொல்லும் வாக்கியத்திலுள்ள பதங்களின் அர்த்தத்தை நன்கு தெரிந்துகொண்டால்தான் அதன் வாஸ்தவமான அர்த்தம் விளங்கும் (18–190)

'தத்' 'துவம்' என்ற பதங்களின் அர்த்தத்தை அன்வயம் வியதிரேகம் இவைகளின் வழியாய்த்தான் அறியவேணும். அதனல் ஆத்மா துக்கமில்லாதது, மாறுதல் இல்லாதது என்று அறியலாம்.

(ஸதேவ ஸோம்ய இதம் அக்ர ஆஸீத்) இருத்தல் என்பதுதான் முதலிலிருந்தே தோன்றிற்று என்ற வேத வாக்கியத்திலும் தத்த்வமஸி என்பதனுலும் எப்படி உண்மையை அறிகிருன் என்ருல் நதியைத்தாண்டியபின் "பத்தாவது மனிதன் நீதான்" என்று சொன்னவுடன் அவனுக்கு உண்மை விஷயம் எப்படி புலப்படுகிறதோ அப்படியேதான்.

ஒன்பது பேர்கள் தான் இருக்கிருர்கள் என்ற தவருன எண்ணத்திஞல், தானே அந்த பத்தாவது நபர் என்று அவன் உணர்வதில்லே. அந்த பத்தாவது நபரைக்கண்டு பிடிப்பதில் தன்னேத்தான் கண்டுபிடித்துக் கொண்டான். (18–174)

அவனுக்கு எப்படி உண்மை விளங்கவில்லேயோ அப்படியேதான் நமக்கும். ஒன்றிலும் சம்பந்தமில்லாத சுத்த ஞானமயமான ஆத்மாவை அக்ஞானத்திஞலும் ஆசை யினுலும் நாம் அறிவதில்லே.

।: அக்ஞானத்தில் இவ்வளவு ஆழமாக மூழ்கிக் கிடந்தால் நம்மை எப்படிக் காப்பாற்ற முடியும்? இதை நிவர்த்திக்க வழி இருக்கும் என்ருல் உண்மையில் துவைதம் உண்டு என்று நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். அக்ஞானத்துக்கு காரணம் இல்லே எனில் அதை நிவர்த்திக்கவே முடியாது. ஏனெனில் பொய்யான காரணத்தால் எதையும் மாற்றமுடியாது.

நம்முடைய மாயையிலிருந்து நம்மை ஒரு மாயாமயமான காரணம் எழுப்பிவிடுகிறது. தூக்கத்தில் ஸ்வப்னம் கண்டு கொடிய மிருகம் வருவதாய் பார்ப்பவன் பயந்து தூக்கத்திலிருந்து எழுப்பப்படுகிறான் அங்கு ஸ்வப்னத்தில் ஏற்படும் வஸ்து ஸ்வப்னத்தை முடித்து விழிப்பைக்கொடுக்கிறது.

நமக்கு வேதாந்தம் சொல்லிக்கொடுக்கும் ஆசார்யரும் வேதமுமே மாயா உலகத்தின் அம்சங்கள் தானே அவர்களின் உதவியால் நமக்கு ஞானம் ஏற்படுகிறது. ஆனால் அவர்களைக் காண்பதில்லை.

ஞானம் ஏற்பட்டபின் ஆத்மா உலகத்தைச் சேர்ந்ததாகவோ அல்லது அதற்கு விலக்காகவோ நமக்குக்காணப் படுவதில்லை. முதலானால் அது உலகமாகவே மாறிவிடும். இரண்டாவதாகில் துவைதமும் வித்யாஸமும் மாறாமல் நிற்கும். கயிறு என்று தெரிந்த பின்பு அதில் தோன்றிய மாயமான பாம்பு கயிற்றுடன் சேர்ந்ததாகவுமில்லாமல் வித்யாஸமானதாயுமில்லாமல் பாம்பு விலகி தடிமட்டும் இருக்கிறதோ அப்படியே அக்ஞானம் நீங்கியபின் சாசுவதமான அறிவு மயமே மீதமாகிறது. இதில் உலகம் சேர்ந்தோ சேராமலோ காணப்படுவதில்லை. உலகம் தோன்றுவதே

"துவம்" என்ற பதத்தால் ஜனன மரணமற்ற ஆத்மா என்றுதான் சொல்லப்பட்டது ஆத்மா அத்துவிதீயமானது (இரண்டற்றது) அதற்கு முந்தியதோ பிந்தியதோ கிடையாது. இதை வேதங்கள் பரிஷ்காரமாய் சொல்கின்றன.

ஸுஷுப்தி நித்திரையின்போது இரண்டாவது வஸ்து காணப்படுவதில்லை. விழிப்பிலும் ஸ்வப்னத்திலும் ஒன்றை மற்றொன்றாக எண்ணுவதற்கு இடம் உண்டு. இந்த தவறுதல் நித்திரையில் கிடையாது. விழிப்பு நிலையிலும் ...யும் காரணமாய் நிற்கும் அக்ஞானம்

தூக்கத்திலும் இருந்துகொண்டே இருக்கிறது. இதை நிவர்த்திக்க சுருதிக்குத்தான் சக்தி இருக்கிறது

இந்த விஷயத்தில் ஆதிசங்கர பகவத்பாதாளின் பரம குருவான கௌடபாதாசார்யாளின் ஆதரவு நமக்கு இருக்கிறது. இவருடைய மாண்டுக்ய உபநிஷத் காரிகையில் இதை விளக்கி இருக்கிருர். ஜாக்கிரதவஸ்தையில் இருப்பவனை விசுவனும், ஸ்வப்னுவஸ்தையிலிருக்கும தைஜஸனும் அஞ்ஞானத்தின் காரணமாய் மாயையில் சிக்கிக் கொண்டு இருக்க, தூக்கத்தில் தோன்றும் பிராஞ்ஞன் என்பவன அஞ்ஞானத்தினல் மட்டும் கட்டுப்பட்டிருக்கிருன். இதற்கு மீறின ஆத்மநிலையோ அஞ்ஞானம் மாயை ஏதும் இல்லாத நிலையாம்.

அவர் மேலும் சொல்லுவதாவது, அஞ்ஞானமும், மாயையும் விலகினபின் இதற்கும் மேலான துரீயம் என்ற நிலையில் ஆத்மானுபவம் உண்டாகிறது.

ஸ்ரீ ஆதிசங்கரரே சொல்வது 'விழிப்புக்கும், ஸ்வப்னத்துக்கும் காரணமே தூக்கத்தில் இருக்கும் அஞ்ஞானம். வறுத்த விதைபோல், இந்த அஞ்ஞானம் எரிக்கப்பட்டால் அதிலிருந்து வேறு ஒன்றும விளையாது.

கௌடபாதாசாரியாரும் ஸ்ரீ சங்கரரும் சொல்வது, 'அஞ்ஞானத்துடன் கூடிய ஆத்மாவே ஈசுவரன் இவர், அந்தக்கரணத்தில் நடக்கும் விஷயங்களை சாக்ஷியாக இருந்துகொண்டு பார்த்துக்கொண்டிருக்கிருர்.

ஆத்மா ஸமஷ்டியான அந்தக்கரணத்தின் காரியத்தை அறியும். அறிவின் லக்ஷ்யத்தையும் அறியும் தான் எவ்வித மாறுதலையும் அடைவதில்லை. அஞ்ஞானம் (ஆத்மாவின் சக்தி என்று சில சமயம் இதை சொல்வதுண்டு) இதற்கு வேருனது, இதற்கு சம்பந்தமில்லாததும் கூட.

ஆத்மாவுக்கு அதைத்தவிற இரண்டாவதான ஏதனுடனும் சம்பந்தமில்லை,

சம்பந்தம் கிடையாது. அவைகள் அக்ஞானத்தின் காரியமானதும் மாறுதல் உடையதுமான மனதினுடையவை.

தூக்கத்தில் மாறுதலுடைய மனதும் மறைந்து போகிறது. இங்கு ஆத்மா எல்லாவற்றையும் பார்க்கிறது. ஆனால் எந்தவிதமான இரண்டாவது வஸ்துவினாலும் அது பாதிக்கப்படுவதில்லை.

ஞானம் அடைந்த மனிதனுக்கு 'நான்' 'எனது' என்ற எண்ணமே கிடையாது. கையில் விளக்கு வைத்துக் கொண்டிருப்பவன் எப்படி இருட்டினால் பாதிக்கப்பட மாட்டானோ அவ்விதமே தான்.

மனிதன் ஞானத்தை அடையும்வரை அவனுக்கு துவைதமான (இரட்டையான) உலகம் தோன்றும். ஞானம் வந்துவிடுமேயானால், அவனுக்கு உலகம் என்பதே கிடையாது. மனதுடன்கூட சம்பந்தம் கிடையாது.

ஞானமடைந்தவன் தன்னுள்ளே தன்னையே காண்கிறான். இதில் ஏற்றுக்கொள்ளக்கூடியது விடத்தக்கது என்ற வஸ்துவே இல்லை. இருக்கிறது இல்லாதது என்ற இரட்டை எண்ணமே இதில் கிடையாது. உலகத்தில் இருக்கும் வஸ்துக்கள் சாதாரணமாக நிலையுள்ளவைபோல் காக்ஷி அளிக்கும் ஆனால் இவைகளில் வாஸ்தவமான இருத்தல் என்பது கிடையாது என்பது தீர்மானம்.

இவ்விதம் அக்ஞானத்தை நிவர்த்தி செய்யும் தன்மையையுடைய வேதாந்தத்தின் தாத்பர்யமான ஆத்மாவைப்பற்றி சொன்னோம்.

இதை கீழ்கண்டபடி சுருக்கச் சொல்லலாம். ஆத்மா பல என்பது தவறு. என்னைத்தவிர ஆத்மாவை அறியும் மற்றது என்பது ஏதும் இல்லை. என்னைத்தவிர அக்ஞானத்துக்கு இருப்பிடமானது வேறு ஏதும் இல்லை. என்னைப் பற்றி எனக்குள்ள அபிப்ராயம் மாறுதல் இல்லாதது. என் ஸ்வஸ்வரூபமான ஞானத்தின் ஸ்வயம்பிரகாசமேதான்,

ஆத்மாவைப்பற்றிய ஆராய்ச்சியை இப்படிச்சொல்லி முடித்துவிட்டு, அறிந்தவனான ஜீவன்முக்தனைப்பற்றி சற்று சொல்லுவோம். வேதத்தில் சொல்லப்பட்ட கர்மாவை எப்போதும் இவன் செய்துகொண்டே இருக்கவேண்டுமா? அல்லது இவன் தன் இஷ்டம்போல் செய்யலாமா?

ஞானம் என்பது ஆத்துவிதீயமான உண்மை அறிவு. ஞானி இந்த சுத்த ஞான நிலையிலேயே இருந்துகொண்டிருப்பதால் இவனுக்கு செய்யவேண்டியது செய்யக்கூடாதது என்பது எதுவுமே கிடையாது.

ஆத்மா தன்னை அறிவதற்குமுன் வெளி வஸ்துக்களை அறிகிறது. இந்த ஞானம் வந்ததும் வெளி வஸ்துவைப் பற்றிய ஞானம் எல்லாம் மறைந்துபோகும். ஆத்மாவுடனேயே இருக்கிறான். ஏனெனில், இவனுக்கு வேறு உலகம் என்பதே கிடையாது.

உலகமே இல்லாததால், வேறொன்றை அடைய வேண்டியதற்கான ஸாமக்ரி ஏதும் இல்லை. செய்யக் கூடாது என்ற காரியமும் இல்லை. ஆகவே ஞானத்தால் செய்யவேண்டியது என்பதோ செய்யக்கூடாது என்பதோ நசிக்கப்பட்டு விடுகிறது.

சுத்தமான ஞானம் பிறந்ததும் அக்ஞானம் நாசமாக்கப் படுகிறது ஆகவே அக்ஞானத்தின் விளைவான உலகமே நசித்துப்போய்விடுகிறது. ஞானத்திற்கு கால அளவோ, இட அளவோ இருக்குமேயானால் அது கொஞ்சம் கொஞ்சமாய் உண்டாகும் ஆனால் அது அப்படியில்லை. இடமும் காலமும் அக்ஞானத்தினால் ஏற்படுத்தப்பட்டவை ஞானம் ஏற்பட்டால் அது திடீரென்று வருகிறது. உடனே அக்ஞானம் முற்றிலும் நாசமடைந்து விடுகிறது. அக்ஞானமும் அதன் காரியங்களும் நாசமாக்கப்பட்டால் வேறு செய்யவேண்டியது ஒன்றுமே இல்லை.

சிலர் எண்ணுகிறார்கள், மாயை ஒழிந்துபோன பின்பும், மாயையினால் உண்டுபண்ணப்பட்டவை மீதமிருக்கும்

என்கிறார்கள். உதாஹரணமாக ஒரு கயிற்றைப் பார்த்து பாம்பு என்று தப்பிதமான எண்ணமும் பயமும் ஒருவனுக்கு ஏற்பட்டால் இவனுக்கு ஏற்பட்ட உடல் நடுக்கம் பாம்பு இல்லை என்று தெரிந்துகொண்ட பின்பும் தங்குகிறது. இது போலவே ஞானம்பெற்ற மனிதன் மாயையின் ஆதாரங்கள் அறுபட்டவனாக ஆனபோதிலும் சில கர்மாக்களை செய்து கொண்டே இருப்பான்.

மரத்தை வேருடன் பிடுங்கி எறிந்தபின்பும் அது காய்ந்துபோவதற்கு சிறிது காலம் தேவையாக இருக்கிறது. அதுபோலவே ஆத்மாவின் உண்மையை அறிந்த பின்பு பூர்வகர்மாவின் பலனை இந்த வாழ்க்கையை முடிக்கும் வரை சரீரத்துடன் இருந்தும் ஆசையின் காரணத்தாலான வேறு எவ்வித காரியங்களையும் செய்யாமல் சரீரத்திலேயே பற்றற்ற நிலைமையில் இருப்பான்.

ஞானிக்கு எவ்வித வித்யாஸ புத்தியுமில்லை அதனால் கண்ட கர்மாக்களை இவன் செய்வானோ என்ற பயமே இல்லை. அப்படி இல்லாவிடில் அசுத்தத்தை உட்கொள்ளும் நாய்க்கும் ஞானிக்கும் என்ன வித்யாஸம் ?

அதர்மமான காரியத்தால் அக்ஞானம் உண்டாகிறது. இதனால் வரம்பில்லாத காரியங்கள் ஏற்படுகின்றன. ஆனால் ஞானம் தர்மமான காரியத்தினால் ஏற்பட்டது. தர்மத்துக்கும் மீறின நிலையை அடைவதால், கண்டபடி சாப்பிடுவதோ குடிப்பதோ ஏற்பட நியாயமில்லை.

பகவத்கீதையில் சொல்லி இருப்பது யாதெனில், ஞானி எந்தவிதமான அதர்மத்தையும் செய்யக்கூடாது.

மோக்ஷம் அடைய விருப்பமுடையவன் (முமுக்ஷு) கெட்டவழியில் நடப்பதில்லை அப்படி இருக்க ஞானியைப் பற்றி ஏன் சந்தேகிக்கவேண்டும் தனக்கு வேண்டாம் என்று விட்டு விட்டதை ஒருவன் செய்வானோ? முமுக்ஷு வானவன் சுவர்க்கம் நரகம பூலோகம் என்ற மூன்று

உலகத்தையுமே விலக்கிவிடுகிறுன். ஆகவே இவனுக்கு அடையவேண்டியது ஏதும் இல்லை. (18. 231)

பசி இருக்கிறது என்ற காரணத்தால் ஒருவன் விஷத்தை சாப்பிடமாட்டான். அப்படி இருக்க இனிப்பான பதார்த்தங்களை நன்ருக சாப்பிட்டவனைப்பற்றி சொல்லவேண்டியதே இல்லை. ஆத்மானந்தத்தை அனுபவித்தவன் உலக சுகத்தை விஷம் என்று வெறுப்பான்.

ஆசாபாசங்களுடன் சம்பந்தப்பட்ட எந்தக்காரியத்தையும் ஞானி செய்யமாட்டான். ஆசை வெறுப்பு என்பவைதான் மனிதனின் காரியத்துக்கு காரணமாகிறது. இவை அக்ஞானத்துடன் சம்பந்தப்பட்டவை. இவைகளில் ஆசை உள்ளவனுக்கு ஞானம் ஏற்படாது. எப்படி மரத்தின் வேரில் நெருப்பை வைத்து விட்டால் புது இலையை அது உண்டுபண்ணுதோ அப்படியேதான்.

எந்த மனிதனுக்கு அஹங்காரம், கர்வம், மற்றவர் பேரில் வெறுப்பு இவை இல்லையோ அவனுக்குத்தான் ஞானம் ஏற்படும். ஆனுல் வெளி உலகத்தில் பற்றுடையவனுக்கு ஞானம் ஏற்படாது.

பிறர்பேரில் வெறுப்புஇன்மை போன்ற நல்ல குணங்கள் ஞானிக்கும் உண்டு. வேறு ஒரு லாபத்தை அடைவதற்காக இக்காரியங்களைச் செய்வதில்லை என்ருலும் அவனுடைய ஸ்வபாவமாகவே அது

ஆத்மாவின் ரூபத்தை உணர்த்துவதற்காக இப்புத்தகம் எழுதப்பட்டது. அதை அறிவதற்குத் தகுந்தவர்களுக்கு ஏற்பட்டது. அவர்கள் அஹங்காரம், டம்பம், பிறரை வெறுத்தல் முதலிய கெட்ட குணங்கள் இல்லாதவர்களாகவும் நல்ல குணங்கள் உடையவர்களாகவும் இருக்கவேண்டும்.

இந்த தத்துவத்தை உலகப்பற்று அதிகமாக உள்ளவர்களுக்கோ, காமம் முதலிய தோஷம் உள்ளவர்களுக்கோ

வேதாந்த கட்டுப்பாடு இல்லாதவர்களுக்கோ உபதேசிக்கக் கூடாது.

இந்த தத்துவத்தின் உண்மையை உணர்ந்தவனுக்கு தெரியவேண்டிய் விஷயம் வேறு ஏதும் கிடையாது. ஆனால் கர்மாவின் பலனை விடாதவர்களுக்கு இந்த உண்மை லகுவில் விளங்காது.

கர்மாவின் சம்பந்தம் அற்றவர்களுக்கும் மனநிம்மதி அடைந்தவர்களுக்கும் மனதை அடக்கி அதை உள் நோக்குடையதாகச் செய்தவர்களுக்கும் மேலே சொல்லப் பட்ட தத்துவம் செவ்வனே விளங்கும்.

இதில் சொல்லப்பட்டிருக்கும் மகா தத்துவம் ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாளின் பாதாரவிந்தங்களை ஸேவித்து அடையப்பட்டது. ஆகவே இதைப்பொருத்து யாரும் துவேஷம் கொள்ளக்கூடாது. நல்ல விவேகிகளால் இது பரிசீலிக்கப்படவேண்டும். அவர்கள்தான் இதன் பெருமையையும் மதிப்பையும் உணரமுடியும்.

குறுகிய மனப்பான்மை உடையவர்களுக்கு நன்றாக இது விளக்கப்படுத்தியபோதிலும் இது அர்த்தமாகாது எப்படி இரவில் மட்டும் பார்வையுள்ள பிராணிகளுக்கு ஸூரியன் விளங்காதோ அப்படியேதான். மனது நிர்மலமாய் உடையவர்களுக்கு ஸ்படிகம்போல் எல்லா இடங்களிலும் இது விளங்கும்.

ஜனனமரணம் என்ற துக்கத்தினால் அவஸ்தைப்படும் எல்லா உலக மக்களும் உய்யும்பொருட்டு மகாவிஷ்ணுவிட மிருந்து பரமசிவன் மூலமாக பகீரதன் கங்கையைக் கொணர்ந்ததுபோல் இந்த வேத தத்துவத்தை ஸ்ரீமன் நாராயணனிடமிருந்து பெற்றார் ஸ்ரீ சங்கரர் (ஸ்ரீ சங்கரா சாரியார்). அவர்களின் மூலம் நான் கொண்டுவந்து கொடுத்திருக்கிறேன்.

நான் என்னுடைய குருவை வணங்குகிறேன். எவர், அக்ஞானத்தை நல்ல காரணங்களாகிய ஆயுதத்தால் வெட்டி விலக்கி, உத்தமமானதும் தெய்வீகமானதுமான வேதாந்தத்தை உலகுக்கு எடுத்துக்காட்டி நம்முடைய மனதில் ஏற்பட்டிருந்த அக்ஞானத்தை ஒழித்து ஒப்பற்றதும் யாராலும் மறுக்கமுடியாததுமான ஆத்மஞானத்தை நமக்கு ஊட்டினரோ அப்படிப்பட்ட குருவுக்கு என் நமஸ்காரம் சேர்ந்தது.

ஓம் தத்ஸத்.